# ஸப்தகிரி

டிசம்பர், 1987

விலை ரூ. 1/-












திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



**நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்**

**பாரார்தத்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்தமத்யாபயந் தீ**

**ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே**

**கோதா தஸ்யை நமஇதமிதம் பூய ஏவாஸ்து பூய:**

*நப்பின்னைப் பிராட்டியினது உயர்ந்த திருமுலைத் தடங்களாகிற மலைச்சாரலில் திருக்கண் வளர்ந்தருளுமவனும், தன்னால் சூடிக் களையப்பட்ட மாலையிலே விலங்கிடப்பட்டமனுமான கண்ணபிரானை திருப்பள்ளியுணர்த்தி பற்பல வேதங்களின் தலையான பாகங்களாலே தேறின வேதாந்தஸித்தமான தன்னுடையதான பாரதந்திரியத்தை அறிவியா நின்றவளாய் பலாத்காரம் செய்து யாவளொரு ஆண்டாள் (அக்கண்ணபிரானை) அநுபவிக்கிறாளோ அப்படிப்பட்ட பெருமையையுடையவளான ஆண்டாளின் பொருட்டு காலதத்துவ முள்ளதனையும் இந்த இந்த நமஸ்காரமானது ஆயிடுக.*

***—திருப்பாவைத் தனியன்.***

டிசம்பர் 1987

# ஸப்தகிரி

இதழ் 7 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில : அரஙகனேபபாடிய திருபபாணாழ்வாரும தொணடரடிப் பொடியாழவாரும, ஆணடாளும

2-வது : ஆநதிரமாநிலம சித்தூா மாவட்டததில ராசபாளம் மறறும புததூர்ஆகிய இடங களில புதியதாகக கட்டபபடவிருககும் தி தி தே. திருமணடபஙகளுககு அடிக்கல் நாட்டப்பட்டபோது.

3-வது . ஆநதிரமாநிலம சிததூா மாவட்டததில் பீலோ மறறும மதனபளளி ஆகிய நகரங களில புதியதாகக கட்டபபடவிருககும தி தி. தே திருமண மணடபஙகளுககு அடிககல நாட்டபபட்டபோது.

பினனட்டையில் : திருமலேயில புஷபயாகம

*சிறப்பாசிரியர் :*
திரு. சிஎச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலேவர்,
தி.தி.தேவஸ்தானம, திருப்பதி.

*ஆசிரியர் :*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

*அசசிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

ஒருவனைப் புகழ ஆரமபித்தால் அவனை இமயத்தின உச்சிக்கே உயர்த்துவர். தூற்ற முயற்சித்தாலோ அவனை அதள பாதாளத்திற்கே அமிழததி விடுவா. இது உலக மககளின இயல்பு. அதுவும இந்திய மக்களின் மன இயல்பு சற்றே வித்யாசமானது; விசித்திரமானது, ஒரு நிலையில பரிதாபத்துககுரியது. தலைவன் வழிபாடு இங்கு தண்ணீர் பட்ட பாடு. ஒருவரை வழிபட ஆரம்பித்துவிட்டால், அவரது குறைகளும் நிறைகளாகிவிடும். பிடிக்காவிட்டால், குறை ஒன்றே நிறைகளை மறைத்துவிடும். பல பண்பாளர்கள், வலலோர்கள் கறிவேபபிலையாக இம்மண்ணில் பயனபடுத்தபபட்டுள்ளனர். பிறரிடம் குறைகளைக் கண்டுபிடித்தே, ஏமாறறஙகளுடனே வாழ்ந்தவர் - வாழ்ந்து கொண்டிருப்பவர் நம்மிடையே பலர் உளர். குறைகளைக களைந்து நிறைகளை வளர்த்துக கொள்ளத தவறியதால்தான், நாம் இன்று பழங்கதை பேசி, பழம் பெருமைபாடி வெறுமே பெருங்காய பாத்திரங்களாக, கிணற்றுத தவளைகளாக விளங்குகினறோம். இந்நிலை தனி மனிதனை மட்டுமன்றி, அவன்தன சமுதாயத்தினையும பாதித்தது, பாதித்தும வருகின்றது என்பதைச் சிறிதும் எண்ணிப் பார்த்தோமில்லை. ஆகையினால்தான் இன்று நாம புதை மணலில் ஓட முயற்சிக்கின்றோம்.

கண்முன் நடமாடும உத்தமர்களின், பண்பாளர்களின நிறை குணங்களையே கண்டு தெளியாத நிலையில் இருக்கின்ற நாம், நம் முன்னோர்களின் வாழ்ககை வரலாற்றுச சிறபபு நிகழசசிகளை, அவை கூறிடும் வாழ்க்கை உண்மைகளை அறிய தவறியதில் வியப்பொன்றுமிலலைதான். தந்தை, தாய், ஆசான், நண்பன், மனைவி என்ற பல நிலைகளில் மனிதனுக்குக் கிடைத்திடும் எல்லா வாழக்கைப் பண்புககூறுகளையும் ஒவ்வொரு இந்தியனுககுத் தருவதில் இந்து சமயத்திற்கு நிகர் வேறு எதுவும் இல்லை. அறிவு ஜீவி முதல் அறிவறறவன் வரை எல்லோரும உயவு பெற்றிட அசசமயம் தந்திட்ட சங்கதிகள்தாம் எவ்வளவு? இட, இன, மொழி, நிற வேறுபாடினறி எல்லோரும் எல்லாம பெறறிட அசசமயம் காட்டிட்ட பாதைகள்தாம் எத்தனை? அத்தனையும மறந்துவிட்டு அள்ளித்தெளித்தக் கோலமாக நம் வாழக்கையினை அலங்கோலமாக்கிக் கொள்ளும் அவலத்தில் அல்லவா நாம் இனறு இருக்கின்றோம. ஆறுவயது பாலகனுக்கும் வாழ்க்கை உண்மையை, மனித நாகரிகத்தைப் பசுமரத்தாணி போல் உணரச செய்தது இந்து சமயம ஒன்றுதான. ஆம், அச்சமயம் தந்திட்ட வேதங்கள், உபநிடதங்கள், அவை கொண்டு விளஙகும் கருததுக கதைகளை விளக்கிடும புராணங்கள, இதிஹாசங்கள், அவறறையும எளிமைப்படுத்திய சமய இலககியங்கள், அவஇலக்கியங்கள் தொழுது போற்றும் பல உருவமைதிகளைக் கொண்ட கடவுளர்கள ஆகியன யாவும் மனிதனை ஒவ்வொரு நிலையிலும மேம்படுத்தும் படிக்கட்டுகளாகும். அப் படிக் கட்டுகளை அண்ணுந்து பார்க்காமலேயே, அவற்றைக் கட்டுக் கதைகள என்று கூறி விணே வாழ்நாளைக் கழிக்கின்றோம. இச்செய்கை, நாளை ஒரு பொறுபபற்ற சமுதாயத்தினை உருவாக்கவே வழிவகுக்கும எனறுதான் கூறவேண்டும்.

இவ்வுலக உயிர்களைப் பிறப்பித்து, காத்துப் படியளக்கும் அப்பரம்பொருளை அடைய பல வழிகளை நமது ஆன்றோர் ஏற்படுத்தினர். அவற்றில் ஒன்று பரம்பொருளைப் பாறகடல் பரமனாக வழிபடும் வைணவ சமய வழி. வேதம் நவின்றேத்திய அவ்வித்தகனின் பேரும் புகழும் ஆழவார்களின் பாடல்களால் ஒரு தனிச் சிறப்பு பெற்றன. அவர்தம் காலத்தே வைணவம் ஒரு மறுமலர்ச்சியினையே கணடது. அவர்கள்தம் பாடல்கள் அப்பரமனின் புகழினைத் தாரணிக்கு வழங்கியது மட்டுமன்றி, அவர்கள தஙகள் வாழ்க்கையின் மூலம் சில உண்மைகளையும் விட்டுச் சென்றனர்.

மக்களால் உருவாககப்பட்டு, இன்று அவாகளையே அழித்திடும ஒரு அவலநிலைககு இழுத்துக் கொண்டு சென்றிருப்பது ஜாதி எனும ஒரு கொடிய நசசாகும். இநது சமயம என்றுமே ஜாதி வேற்றுமையைப் பாராட்டியதில்லை. இதனைத்தான் திருப்பாணாழவார் சரிதமும் கூறுகிறது. தாம் வளாந்த பாணாகுலத்தைத் தாழநததாக எண்ணிக் கொண்டு, அரங்கனின் கோயிலுக்குள் புகவும் தயங்கிய திருப்பாணாழ்வாரை, குலம் கண் கொண்டு, கல்லெறிந்து தூர விலகச் செய்தார், லோக சாரஙகர் எனும முறறும் கறற அநதணர் ஒருவா. ஆனால அவரைக் கொண்டே அவர் தோளிலேயே திருபாணாழவாரை சுமக்கச் செய்து, தன் திருமுன கொணர்ந்த அரங்கனின் திருவிளையாடலால் நாம் அறிவது, பிறப்பால், படிப்பால மட்டுமே ஒருவன் உயர முடியாது, பண்பால் மட்டுமே, தூயமையான உளளத்தால் மட்டுமே மனிதன் நற்கதி பெற்றிட முடியும என்பதுதான. இதனைக் கூறததான் 'ஸம்க்ஷேப பாகவதத்தை'த் தந்தருளிய 'முனியேறின முனி'யின் வாழ்க்கையில இந்நிகழச்சியை இறைவன் காட்டியருளினான்.

பல நிறைகள் இருந்தாலும் ஒரு குறையே அவன் பெருமையை அழிததிடும் என்பது உண்மையாயினும், அக்குறையைக் களைந்திடின், அவன பெருமை உயரவே செய்யும் என்பதும், மறைநத அக்குறையைக் கொண்டே ஒருவனை சமுதாயத்திலிருநது ஒதுக்கிடக் கூடாது எனபதும் விப்ரநாராயணா வாழ்வில் நாம் கண்டு தெளியும உண்மையாகும். தீவிர பகதராக விளங்கிய அத்தொண்டர், தேவ தேவிக்கும தொண்டனாகி, சிற்றின்பததில் ஈடுபட்டாலும் பின்னர் தன் தவறுணர்ந்து, அப்பரமனின் புகழ்பாடியது மட்டுமன்றி, அவனுடைய தொண்டனுக்கும தொண்டனாக இருந்து தொண்டரடிப் பொடியாழ்வாராக விளங்கிய அவ ஆழ்வாரது சரிதம், சமுதாயத்தில் தடுக்கிவிழுந்து பின்னர் தலைதூக்கத் துடிக்கும் பலரது வாழ்வுக்கு ஓர் ஊனறு கோலாகும்.

அடுதது, காதற்சுவை தோய்ந்த தன் பாடலகளின் மூலம், வேதம் தந்திட்ட ஞான விளக்கை மக்கள் மத்தியில் ஏற்றி வைத்த அந்த 'பிஞ்சிலே பழுத்தவளி'ன் வாழ்க்கை வரலாறு நமக்குக் கூறுவது, நல்லறிவுடனும், உள்ள உறுதியுடனும் பெண்கள் விளங்க வேண்டியதன் அவசியத்தை இன்றைய மகளிர் உணரவேயாகும். திருப்பாவையின் ஒவ்வொரு அடியும் அவளது ஞான அறிவினையும், அனுபவ முதிர்ச்சியினையும், தீவிர பக்தி நெறியினையும் படம் பிடித்துக் காட்டுவனவாகும்.

இவ்வகையில் இம்மாதத்தில் பேசப்பெறும் இம்மூவரையும் இம்மாநிலத்தோர் உள்ளத்தாலும் உடலாலும் பணிந்தேத்துவார்களேயானால், இதுவே இம்மையில் நாம் இனபமுடன் இனிது வாழ வழிவகுக்கும்.

# செய்திச் சுருக்கம்

திருப்பதியிலுள்ள ஸ்ரீ கோவிந்த ராஜ சுவாமி கோயிலிலும் மற்றும் திருச்சானூர் ஸ்ரீபத்மாவதித் தாயார் கோயிலிலும் சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டின் கட்டணம் ரூ. 2லிருந்து ரூ. 5 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் மார்கழி மாதத்தின்போது அதாவது 17-12-87 முதல் 14-1-88 வரை, ஸுப்ரபாதத்திற்குப் பதிலாக திருப்பாவை அனுசரிக்கப்படுவதால், இதுபோது ரூ. 50/- டிக்கெட்டிற்கு அனுமதிக்கப்படும் ஸுப்ரபாத சேவை இருக்காது.

திருப்பதி மற்றும் அதனைச் சுற்றியுள்ள திருச்சானூர், மற்றும் ஸ்ரீ நிவாசமங்காபுரம் கோயில்களுக்குச் சென்று வரும் தி. தி. தேவஸ்தானத்தாரின் பேருந்துக் கட்டணம் ரூ. 12லிருந்து ரூ. 18/- ஆக (நபர் ஒருவர்க்கு) உயர்த்தப்பட்டுள்ளது. சிறுர்களின் கட்டணம் ரூ. 6 லிருந்து ரூ. 9/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

திருமலையில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் சத்திரத்திற்காக மனை எண். 4 கொடுக்கப்பட்டுள்ளது. தற்போது, அந்த மனையை அடுத்துள்ள 40×90 அடி பரப்புள்ள காலி இடத்தினை அப்பீடம் கேட்டுக் கொண்டு தற்கிணங்க, வருடத்திற்கு ரூ. 100/- என்ற குத்தகைக்- கட்டணத்திற்கு விடுவதென்று தி.தி.தே. மேலாண்மை முடிவு செய்துள்ளது.

அண்மையில் திருப்பதிக்கு வருகை புரிந்த முன்னாள் இந்திய ஜனாதிபதி திரு. ஜெயல் சிங் அவர்களின் இந்திச் சொற்பொழிவினைத் தெலுங்கில் மிக அழகாக மொழி பெயர்த்த தி.தி.தே தர்ம பிரசார பரிஷத்தைச் சார்ந்த திரு. எம். வி. எஸ். சாஸ்திரி அவர்களுக்கு தேவஸ்தான மேலாண்மை ரூ. 500/-பரிசு வழங்கிகௌரவித்தது.

திரு. அப்பிகட்ல வி. தேசிகாசார்யலு அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தின் வைகானஸ ஆகமத்தின் ஆஸ்தான பண்டிதராக மேலாண்மையினால் நியமிக்கப்பட்டுள்ளார். திரு. பெனுமுடி பி. லக்ஷ்மி நரசிம்மாசார்யலு அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தின் பாஞ்சராத்ரா ஆகமத்தின் ஆஸ்தான பண்டிதராக நியமிக்கப்பட்டுள்ளார். இவர்கள் இருவருக்கும் ஆண்டுதோறும் ரூ. 1116/- சிறப்பூதியமும், பொன்னாடையும் வழங்கப்படும். அலுவல் காரணமாக திருமலை மற்றும் திருப்பதியில் தங்கும்போது, அவர்களுக்கு இலவச தங்கு வசதியும், போக்குவரத்து வசதியும் அமைத்துத் தரப்படும். தங்கள் சொந்த ஊரிலிருந்து வந்து போக முதல் வகுப்பு பிரயாணப்படியும், இவ்விடங்களில் தங்கும்போது நாள் ஒன்றிற்கு ரூ. 30/- பஞ்சப்படியும் அளிக்கப்படும்.

திருமலைக் கோயிலில் ஐயன மஹாயில் (கண்ணாடி அறையில்) நடைபெறும் ஊஞ்சல் சேவையின் கட்டணம் ரூ. 1500/- லிருந்து ரூ. 750/- ஆக குறைக்கப்பட்டுள்ளது. இச் சேவையின்போது கிருஹஸ்தருக்கு சேஷவஸ்த்ரம், உத்தரியம் (ப்ருத்தி) ரவிக்கைத்துண்டு ஆகியன பஹுமானமாகக் கொடுக்கப்படும்.

பம்பாயைச் சார்ந்த பல அறக்கட்டளைகள் மற்றும் நிறுவனங்களின் உரிமையாளர் எஸ். கே. சோமாணி அறக்குழுவினர் இதுவரை திருமலையில் நாராயணகிரியில் 3-வது விருந்தினர் விடுதிக்கென இதுவரை நன்கொடைத் திட்டத்தின்கீழ் ரூ. 21,60,001/- வழங்கியுள்ளனர். தற்போது அவர்கள் கேட்டுக் கொண்டபடி, அவ்விருந்தினர் விடுதிக்கு 'ஸ்ரீகிருஷ்ண நிலயம்' என்ற பெயர் வைப்பதென்று மேலாண்மை முடிவுசெய்துள்ளது.

திருமலையில் அதிகமாக பெருகிவிட்ட குடிசை வாழ் குடும்பங்களைத் திருப்பதிக்குக் குடியமர்த்த தேவஸ்தானம் மேற்கொண்ட முயற்சியில் பெரிதும் பங்கேற்ற பல நிலைகளில் பணிபுரியும் தி. தி. தே. ஊழியர்கள் 13 நபர்களுக்கு மேலாண்மை தலா ரூ. 200/- வழங்கி கௌரவித்தது.

## சந்தாதாரர்களுக்கு....

31-1-88—ம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

2 12 22 39 79 80 81 129 143 153 157 162 264 275 335 426 444 448 449 454 463 464 468 481 482 486 487 488 489 493 494 495 623 முதல் 630 896 902 913 964 970 971 978 984 985 988 996 997 1003 1005 1009 1012 1017 1019 1021 1022 1025 1026 1029 1035 1036 1037 1044 1045 1049 1053 1061 1062 1065 1077 1085 1088 1089 1095 1096 1102 1106 1110 1111 1113 1115 1116 1117 1119 1120 1127 1133 1134 1138 2051 2336 2378 2381 2384 முதல் 2424 2426 2427 2429 முதல் 2438 2440 முதல் 2446 2448 முதல் 2476 2478 2510 2512 2513 2514 2516 முதல் 2520 2523 முதல் 2548 2550 முதல் 2567.



# கார்த்திகை மாதமும் கலியனும்

திரு. டி. கேசவ அய்யங்கார்,
அல்லூர்

## முன்னுரை

கார்த்திகை மாதம் என்றாலே, நம் எல்லோருக்கும் முதலில் ஞாபகம் வருவது, கார்த்திகை தீபம்தான். அநேகமாக, நம் பாரத தேசம் முழுவதும் கொண்டாடி வரும் இரண்டு முக்ய பண்டிகைகள் தீபாவளியும், கார்த்திகையும்தான் என்றால் அது மிகையாகாது. தீபாவளியும், கார்த்திகையும் முறையே ஐப்பசி-மாதம், அடுத்த கார்த்திகைமாதம் ஆகிய இருமாதங்களில் அடுத்தடுத்து வருகின்றன. நம்நாட்டில் கார்த்திகை மாதம், கார்த்திகை தீபத்தன்று, எல்லோருடைய வீடுகளிலும் மாலையில், தீபங்களை ஏற்றி வரிசை வரிசையாகவும் அழகாகவும் வைத்திருப்பது பார்ப்பதற்குக் கண்கொள்ளாக்காட்சியாகவும் கண்களுக்கு ரம்யமாகவும், தெய்வீகமாகவும் இருக்கும். திருவிளக்கில் பகவானை ஆவாஹனம் செய்து திருவிளக்கு வழிபாடு செய்வது நம்நாட்டு மரபாகும். இந்தத் தத்துவத்தை அனுபூதி மஹானை அருணகிரிநாதர் தம்முடைய திருப்புகழில், "தீப மங்கள ஜோதி நமோ நமோ" என்று பாடியுள்ளார்.

திருக்கார்த்திகையின்போது 'சொக்கப்பானை கொளுத்துவது" என்பது தொன்று தொட்டே வருவதாகும்.

தவிர ஸ்ரீயப்பதியான எம்பெருமானுடைய பரம-க்ருபையால், மயர்வற மதிநலம் அருளப்பெற்று, சேதனர்களாகிய ஸம்ஸாரிகளின் உஜ்ஜீவனத்தின் பொருட்டு, இப்பூவுலகில் அஞ்ஞான இருள் நீங்க வந்துதித்த ஆழ்வார்கள் பன்னிருவரில் இந்த கார்த்திகை மாதத்தில், அவதாரம் செய்த ஆழ்வார்கள் முறையே திருப்பாணாழ்வாரும், திருமங்கையாழ்வாருமாகும். இவ்விரு ஆழ்வார்களும் முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் ஆகிய மூவரும் ஐப்பசிமாதத்தில் திருவோணம், அவிட்டம், சதயம் என்ற நக்ஷத்ரங்களில் வரிசையாக அவதாரம் செய்ததுபோல், கார்த்திகைமாதம், கார்த்திகை நட்சத்திரத்தில், திருமங்கையாழ்வாரும், கார்த்திகைமாதம் ரோகிணி நட்சத்திரத்தில் திருப்பாணாழ்வாரும் அவதாரம் செய்தபடியால் இந்த கார்த்திகை மாதம் ஏற்றமுடையதாகிறது. (தவிர இந்த கார்த்திகை மாதத்தோடு தேவர்களுக்கு இரவுக்காலம் முடிகிறது என்றும் பெரியோர் கூறியுள்ளனர்) இக்கருத்தை ஸ்வாமி வேதாந்த தேசிகன், ப்ரபந்தஸாரம் 12-ம் பாசுரத்தில் "உலகறிய மலி புகழ்க் கார்த்திகை மாதத்தில், உரோகிணி நாளுறந்தை வளம்பதியில் தோன்றி" என்றும், 13ம் பாசுரத்தில் "அறிவு தரும் பெரிய திருமொழி தப்பாமல்.........இறையவனே கார்த்திகையிற் கார்த்திகை நாள், எழித்துரையல் வருக கலியா விரங்குநீயே" என்றும் அருளிச் செய்துள்ளனர். அது தவிர ஸ்ரீமத் மணவாள மாமுனிகளும் தாம் அருளிச் செய்துள்ள உபதேசரத்தின மாலை 8-ம், பாசுரத்தில் "......ஒதுகின்றேன்—வாய்த்த புகழ் மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த கார்த்திகையில் கார்த்திகைநாள்" என்றும், 9-ம் பாசுரத்தில், "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன், ஆறங்கம கூற அவதரித்த—வீறுடைய கார்த்திகையில் கார்த்திகை நாள் என்றென்று காதலிப்பர்' என்றும், 10-ம் பாசுரத்தில் "கார்த்திகையில் ரோகிணிநாள் காண்மின் இன்று காசினியீர், வாய்த்த புகழ் பாணர் வந்துதிப்பால்" என்றும்

அருளிச் செய்திருப்பதிலிருந்து கார்த்திகை மாதத்தின் ஏற்றம் தெளிவாக விளங்கும்

**திருமங்கையாழ்வார் அவதாரமும் வைபவமும்**

ஆழ்வார்களின் அவதார காலத்தை—குருபரம்பரா ப்ரபாவத்தில் கூறியிருப்பதை, சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. சரித்திர ஆராய்ச்சியாளாகளின் கருத்துப்படி, ஆழ்வார்களின் அவதார காலம் கி. பி. 7-ம் நூற்றுண்டு முதல் கி. பி. 9-ம் நூற்றுண்டு வரை என்பதுதான் அவர்களின் முடிவு. எப்படி இருப்பினும் இந்த ஆழ்வார் ஒரு நள வருடம், கார்த்திகைமாதம், பௌர்ணமி திதியில், வியாழக்கிழமை கார்த்திகை நட்சத்திரத்தில் திருமாலின் ஆயுதங்களில்ஒன்ருன, சார்ங்கம் எனனும் வில்லின் அம்சமாக அவதரித்தார் என்கிறது குரு பரம்பரா ப்ரபாவம். இந்த திருமங்கையாழ்வார்தான், ஆழ்வார்கள் பன்னிருவரிலும் கடைக்குட்டி யாவார். இவர் அவதரித்த ஸ்தலம் சோழநாட்டின் உட்பிரிவுகளில் ஒன்ருன திருவாலி நாட்டைச்சேர்ந்த திருநகரிக்கு வெகு அருகாமையிலுள்ள திருக்குறையலூர் என்ற சிற்றூராகும். சோழ மன்னரின் படைததலைவர்களில் ஒருவரான நீலன் என்று பெயர் கொணடவருக்கு நான்காம் வருணத்தில் மகனுகப் பிறந்தார். இவர் பிறந்த போது நீலநிறமாக இருந்தபடியால் இவருக்கும் நீலன் என்றே தந்தையார் பெயர் சூட்டினர். இவர் யுக்த வயதை அடைந்ததும், எல்லா ஆயுதப் பயிற்சிகளிலும், குதிரையேற்றம் முதலியவைகளிலும் நன்கு தேர்சசி பெற்றிருந்தபடியால் சோழமன்னர் படைகளில் சேர்நதார். இவர் சோழ மன்னனுக்காகப் பல போர்களில், மன்னருக்கு வெற்றியைத் தேடித் தந்த படியால், சோழமன்னர் இவர் பால் அன்புகொண்டு. ஆலிநாட்டை இவருக்கே கொடுத்து, தன் கீழ் குறுநில மன்னனுக்கினர். இவருக்கு அதி பராக்ரமசாலிகளாகவும், வீரர்களாகவும், மிகுந்த மதிநுட்பம் உடையவர்களாகவும் இருந்த, "நீர்மேல் நடப்பான், தோராவழக்கன், உயரத் தொங்குவான், நிழலொதுங்குவான், தாளுதுவான், நிழல் பிடிப்பான்" என்ற ஆறுபேர்களும் துணைவர்களாகவும் அமைச்சர்களாகவும் அமைந்தனர்

ஒரு சமயம் திருநகரிக்கு அருகிலுள்ள 'திருவெள்ள குளம்' (இன்றைய அண்ணன் கோவில்) என்ற திவ்ய தேசத்திலுள்ள புஷ்கரணியில் நீராடிக் கொண்டிருந்த தேவமாது ஒருவள், தன் தோழியரால் தனித்து விடப்பட்டவளாய், குமுத மலர்களிடையே குழந்தையாக மாறி இருந்தாள். அது சமயம் புஷ்கரணியில் நீராட வந்த மகா பாகவத வைணவ மருத்துவன் ஒருவன், குமுதமலரிடையே குழந்தையைக் கண்டு, தனது பிள்ளையில்லாக் குறையைப் போக்க, எம்பெருமான் அளித்த ப்ரஸாதமாக கருதிக் குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து, குமுத மலாகளிடையே கிடைததக் குழந்தையாதலால், 'குமுதவல்லி' எனறு பெயர் சூட்டி வளர்த்து வநதான். சில காலம் கழித்து, ஒரு நாள பரகாலன், திருவெள்ளக்குள எம்பெருமானை சேவிக்க வந்தபோது, மருத்துவர் வீட்டில் இருந்த குமுதவல்லியாரைக் கணடு, மணம செய்து கொள்ள விரும்பி, மருத்துவரிடம் தன் விருப்பத்தை வெளியிட்டார். மருத்துவரும் குமுதவல்லி கிடைத்த விவரத்தைச் சொல்லி பிறகு மணம் செய்து கொடுகக இசைந்தார். ஆனல் குமுதவல்லியோ 'தப்த சக்ராங்கனம் திவ்யோர்தவ புண்ட்ரகம்'முதலிய பஞ்ச ஸமஸ்காரங்களையுடைய, ஒரு வைணவருககேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப் படேன் என்று உறுதியாகச் சொன்னுள். இதைச் செவியுற்ற பரகாலனும் திருநறையூர் (இன்றைய நாசசியார் கோவில்) என்ற திவ்யதேசத்திற்குச் சென்று, நம்பி எனப்பெயர் கொண்ட எம்பெருமானைச் சேவித்து தனககுப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்ய வேணடி பிரார்த்தித்து நிற்க, அந்த நம்பிபிரானும், பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து வைக்க, பரகாலனும் திரும்பி வந்து குமுதவல்லியை மணம் செய்து கொள்ள வேணடினன். அவளும் பரகாலரிடம், 'ஆராதநாநாம ஸர்வேஷாம் விஷ்ணேராராதனம பரம், தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் தத்பக்தாஞம் ததீயாராதனம்' என்றபடி 'எல்லா தேவதைகளையும் ஆராதிப்பதைக் காட்டிலும், விஷ்ணுவை ஆராதிப்பது மிகவும் சிரேஷ்டம் என்றுலும், அதைக் காட்டிலும், அவனடியார்களான பாகவதோத்தமர்களை ஆராதிப்பது மிகமிக ஸ்ரேஷ்டம்:' என்று சொல்லியிருக்க படியால், நீர் ஓர் ஆண்டு வரையிலும் நித்யம் 1008 பாகவதர்களுக்கு அமுது செய்வித்து, அவர்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தமும் தளிகைப் பிரசாதத்தையும் ஸ்வீகரித்து வந்தால் மணுளனுக ஏற்றுக் கொள்ளுகிறேன் என்று உறுதியாகச் சொன்னுள். அது கேட்ட பரகாலனும், குமுதவல்லியாரின் பேரில் இருந்த காதல் வேட்கையால், அவ்விதமே செய்து வருவதாக சபதம் செய்து கொடுத்த பிறகே இருவருக்கும் திருமணம் நடந்தது. பரகாலனும், சபதம் செய்து கொடுத்த படியே, பாகவதாராதனத்தைக் குறைவரச்செய்து வந்தார். இதனுல் திரவியம் செலவழிந்து போய், சோழ மன்னருக்குச் செலுத்த வேண்டிய திரைப்பணத்தையும் செலுத்த மு்டியாமல் போய்விட்டது. சோழ மன்னனும் திரைப்பணத்தைக் கட்டுமாறு பல தடவைகள் சொல்லியனுப்பியும், கட்டாது காலங்கடத்தி வந்தார். அதனுல் சினங்கொண்ட சோழ மன்னரும், மங்கை வேந்தனைப் பிடித்து வர சிறு படை அனுப்ப, பரகாலனும், 'ஆடல்மா' என்ற தன் குதிரை மீதேறிப் போர் புரிந்து சோழப்படைகளை விரட்டி வென்ருர். அதனுல் சோழன் மீண்டும் பெரும்படையுடன் வந்து பரகாலனை வளைத்துப் பிடித்து,

ஒரு தேவாலயத்தில் சிறை வைத்தார். இவ்விதம் இவர் அந்த கோவிலில் மூன்று நாட்கள், உண வின்றி எம்பெருமானையே தியானித்து வந்தார். மூன்றும் நாள் இவரது கனவில் காஞ்சி பேரருளாளன் சேவை சாதித்து, காஞ்சிக்கு வந்தால் வேண்டிய திரவியம் கிடைக்கும் என்று அருளி மறைந்தார். இதை அமைச்சர்கள் மூலம் அறிந்த சோழ மன்னனும், தக்க காவலுடன் பரகாலனைக் காஞ்சிக்கு அனுப்பி வைத்தான். கனவில் கண்டபடி காஞ்சியில் திரவியம் கிடைக்காமல், வருந்தி காஞ்சி பேரருளாளனைச் சரணமடைந்து பிரார்த்தித்து மூர்ச்சையானார். அப்போது கருணைக் கடலான வரதர் மீண்டும் கனவில்வந்து, வேகவதி நதிக்கரையில், திரவியம் இருக்குமிடத்தைக் குறிப்பிட்டுக் காட்டியருள, பரகாலனும் குறிப்பிட்ட இடத்தில் திரவியத்தைக் கண்டு எடுத்து, சோழ மன்னனுக்குச் சேர வேண்டிய திரைப்பணத்தைக் கட்டிவிட்டு மிகுதியை பாகவதாராதனத்திற்காக வைத்துக் கொண்டு, ததீயாராதனத்தைக் குறையின்றி நடத்தி வந்தார். கையிலிருந்த திரவியம் முழுவதும் தழிந்து போகவே, வேறு வகை ஒன்றும் தோன்றாதபடியால், பரகாலன் வழிப்பறி செய்தாகிலும், பாகவத கைங்கர்யத்தைச செய்ய நினைத்து, அவ்விதமே செய்தும் வந்தார்.

இங்ஙனம் நடந்து வருகையில், ஒரு நாள் வழிப்பறிச் செய்வதற்காகத் தன் பரிவாரங்களுடன், 'திருமணங் கொல்லை' என்ற இடத்தில், அரச மரத்தில் பதுங்கி யாராவது வருகிறார்களா என்று பார்த்துப் பதுங்கி இருந்தார். இவவிதம் வழிப்பறி செய்து கிடைத்த திரவியம் முழுவதையும பாகவதர்களுக்குத் ததீயாராதனத்தில் செலவு செய்து வந்தபடியால், பகவான் இவர் செயலை உணர்ந்து, இவருக்கு விசேஷ கடாக்ஷம் செய்து, இவரைத் திருத்திப் பணி செய்து கொள்ள வேணும் என்று நினைத்து, பெருமாளும், பிராட்டியும், தங்களை வழிப்பறி செய்ய வேண்டி, புதுமண அந்தணத் தமபதிகளாக வேடம் பூண்டு நிறைய ஆபரணங்களை அணிந்து கொண்டு, பரகாலன் பதுங்கியிருந்த இடத்திற்கு வந்து கொண்டிருந்தார். சமீபத்திற்கு வந்தவுடன் பரகாலனும் பரிவாரங்களுடன், ஆயுத பாணிகளாய், அந்த புதுமணத் தம்பதிகளைச் சூழ்ந்து கொண்டு ஆபரணங்களை எல்லாம் பறிமுதல் செய்து கொண்டான். அது சமயம் மணமகனின் காலில் அணிந்துள்ள ஒரு மோதிரத்தைச் சுலபமாகக் கழற்ற முடியாமல், அந்தணனாக வந்துள்ள எம்பெருமான் திருவடிகள் கீழே, தெண்டன் சமர்ப்பிப்பது போல் படுத்து அந்த மோதிரத்தைத் தன் பற்களால் கடித்து வாங்கிக் கொண்டார். பிறகு வழிப்பறி செய்த பொருட்களையெல்லாம், மூட்டையாகக் கட்டி எடுக்கப் போக, அம்மூட்டையை எடுக்க முடியாமலும, இடம் பெயர்க்க முடியாமலும் போகவே பரகாலன், மணவாளனாக வந்த அந்தணனைப் பார்த்து, மூட்டையை எடுக்க முடியாமல போக என்ன மந்த்ரவாதம் செய்தாய் என்று பயமுறுத்திக் கேட்டார். அப்போது அந்தணனாக வந்திருந்த எமபெருமான், அந்த மந்திரத்தை உமக்குச் சொல்கிறேன் வாரும் என்று அருகில் அழைத்து வைத்துக்கொண்டு பரகாலரின் வலது செவியில் 'ருசோ யஜூம் ஷிஸாமாநிததை வாதர்வணு நிச, ஸர்வமஷ்டா க்ஷராதஸ்தம் யச்சான்ய தபிவாங்மயம்' என்றபடி ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்களாகிய சப்த ஸமுஹங்கள் எல்லாம் அஷ்டாக்ஷரத்தில அடங்குபவையே என்றும், 'ஸர்வவேதாநத ஸாரார்த்தஸ், ஸம்ஸாரார்ணவதாரக: கதிரஷ்டாக்ஷ ரோந்ருணு மபுநர்பவகாங்ஹிணும்' என்கிறபடியும், ஸர்வவேதாந்த ஸாரபூதமாயும், ஸம்ஸாரமாகிற கடலிலிருந்து கரையேற்றுவதாயுமிருக்கிற திருவெட்டெழுத்தொன்றே சேதனர்களுக்குக் கதியாகும் என்பதால் பரகாலனுக்குத் 'திருமந்த்ரத்தை' உபதேசம் செய்து கருடாருடராய் சேவையும் சாதித்தார். இவ்வித தம்சாக்ஷாத் பகவானால் நேரில் திருமந்த்ரமாகிய திருவெட்டெழுத்தை உப தேசம் பெறும்பேற்றை அடைந்தவர் திருமங்கையாழ்வார் ஒருவரேயாகும். முன்பு பத்ரிகாஸ்ரமத்தில், நரநாராயணனாய் அவதரித்து, தனக்குத் தானே உபதேசம் செய்து கொண்ட குறை இப்போது நீங்கிவிட்டதாக கூறுவர் முன்னோர்.

இவ்விதம் எம்பெருமானால் நேரில் மந்த்ரோப்தேசம் பெற்றபடியாலும், பகவானுடைய திவ்ய மங்களத் திருமேனியைத் தரிசித்ததினாலும், முன்பு காலாழியைத் கழற்ற பகவானுடைய திருவடிகளில் தெண்டன் சமர்ப்பித்தாறபோல் அடி பணிந்து திருவடிகளில வாயை வைத்தபடியாலும், இவருடைய அஞ்ஞானம் கழிந்து போய், தவிர பெரிய பிராட்டியால் 'அருள் மாரி' என்றபடி, ஞானக் கண்களைப் பெற்று தத்வஞான சுடராக விளங்கி, பகவானை பூர்ணமாக அனுபவித்து, அவ்வனுபவம உள்ளடங்காமல் ப்ரவாஹமாக வர அநேக திவய ப்ரபந்தங்களை அருளிச் செய்தார்.

திருமங்கையாழ்வாரின் விருதுகளும் பெயாகளும :

இவர் பிறநதபோது நீலநிறமுடையவராக இருந்தபடியால் தந்தையால் 'நீலன்' என்று பெய்ரிடப்பட்டார். சோழ மன்னன் செய்த பல போர்களில இவர் படைகளோடு முன் சென்று பராக்ரமத்தால் பகைவர்களுக்குக் காலன் போன்று இருந்தபடியால் 'பரகாலன்' என்று பெயர் சோழ மன்னனால சூட்டப்பட்டது. திருஆலி நாட்டில் பிறந்தபடியால் "ஆலிநாடர்" என்றும், மங்கை என்னும் நகரை தலைநகராகக் கொண்டு ஆண்டு வநதபடியால் 'மங்கை வேந்தன்' என்றும, மணமகனாக வந்த எம்பெருமானின் திருவடிகளிலுள்ள காலாழியைக் கழற்றத் தன் பற்களால் கடித்து வாங்கியதின்

மிடுக்கை கண்ட பகவான், 'நீர் நம் கலியனோ' என்று அருளியதால் கலியன் என்ற பெயரும் ஏற்பட்டது. பெரிய பிராட்டியின் அனுக்ரஹத்தால் 'அருள்மாரி' என்ற பெயர் கொடுத்தார். பகவதனுக்ரஹத்தால் இவர் ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்ற நான்கு வகைக் கவிகளிலும் பாடவல்லவராயிருந்தபடியால் 'நாலு கவிப்பெருமாள்' என்ற பெயரும் ஏற்பட்டது. குமுத மலரில் பிறந்த குமுதவல்லியை மணம் செய்து கொண்டபடியால் 'மலர்க் குழலியர் வேள்' என்றும், பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற ஆறு திவ்ய ப்ரபந்தங்களை அருளிச் செய்தபடியால் 'திருமங்கையாழ்வார்' என்னும் திருநாமமும் பெற்றார்.

**திவ்யதேச யாத்திரையும் மஙகளா ஸாஸனமும் :**

திருமங்கையாழ்வார் வட, தென்னாடு முழுவதும் அநேக திவ்ய தேசங்களுக்கு விஜயம் செய்து அங்குள்ள எம்பெருமான்களை மங்களா ஸாஸனம் செய்துள்ளார். இவ்விதமாக மங்களா ஸாஸனம் செய்து கொண்டு சோழ நாட்டில் 'காழிச்சீராம விண்ணகரம்' எனப் பெயர் கொண்ட சீர்காழிககுத் தன் சீடர்களோடு அங்கு எழுந்தருளியிருக்கும் 'தாடாளனை' மங்களாஸாஸனம் செய்ய வந்தார். அப்போது இவர் சீடர்கள் ஆலிநாடர் வந்தார், பரகாலன் வந்தார், கலியன் வந்தார், நாலுகவிப் பெருமாள் வந்தார், மங்கை வேந்தன் வந்தார் என்ற விருதுகளோதி வந்தனர். அது சமயம் சீர்காழியில் சைவ சமயக் குரவர்களில் முதல்வரான திருஞான சம்பந்தப்பெருமானும், தன் பரிவாரங்களோடு தங்கியிருந்தார். திருசம்பந்தருடைய சீடர்கள், ஆழ்வாருடைய சீடர்கள் விருதுகளைச் சொல்லிச் செல்வதைத் தடுத்து நிறுத்த ஆழ்வாரும், சம்பந்தரை சந்தித்து உரையாடினர். சம்பந்தரும் ஆழ்வாரை நோக்கி ஒரு குறள் பாடும் எனக்கேட்க, ஆழ்வாரும் அவர் சொன்ன சொல்லையே முதலாக அமைத்து, காழிச் சீராம விண்ணகரில் கோயில் கொண்டுள்ள தாடாளப் பெருமாள் விஷயமாக 'ஒரு குறளாய் இரு நிலம் மூவடி மண் வேண்டி' (பெரிய திருமொழி 3ம் பத்து 4ம் திருமொழி) என்ற 10 பாசுரங்கள் அருளிச் செய்து, கடைசி பாசுரத்தில் தன் விருதுப் பெயர் களனைத்தையும் வைத்து அருளிச் செய்தார். பாடல் பின்வருமாறு:

"செங்கமலத்து அயனனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகரின் செங்கண் மாலை,
அங்கமலத்தடவயல்சூழ் ஆலிநாடன்
அருள்மாரி அரட்டமுககி அடையார் சீயம்
கொங்குமலர்க்குழலியர்வேள் மங்கை வேநதன்,
கொற்றவேற பரகாலன கலியன் சொனன
சஙகமுகத்தமிழ்மாலை பத்தும்வல்லார்
தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர் தாமே.

(பெரிய திருமொழி 3ம் பத்து 4ம் திருமொழி 10ம் பாசுரம்.)

இப்பாசுரங்களைச் செவியுற்ற திருஞான சம்பந்தரும், அதிப்ரீதி கொண்டு, இவ்விருதுகள் இவருக்குப் பொருத்தமே என்று சிலாகித்து, தன் கை வேலையும் பரிசாக ஆழ்வாருக்கு அளித்தார்.

**திருப்பணி கைங்கர்யம் :**

இவ்வாழ்வாரும் பல திவ்ய தேச எம்பெருமான்களை மங்களா ஸாஸனம் செய்து கொண்டு, திருவரங்கத்துக்கு எழுந்தருளி, நம்பெருமாளை மங்களா ஸாஸனம் செய்து சேவித்து நிற்கையில், நம்பெருமாளும், தம் சந்நிதியின் விமானம், மண்டபம், மதிள் முதலிய திருப்பணி கைங்கர்யங்களைச் செய்யுமாறு கட்டளை இட, பரகாலரும், அதிபராக்ரம செயல்களை செய்யக் கூடிய தன் அமைச்சர்களின் துணை கொண்டு, அவர்களின் ஆலோசனையின்படி திருநாகையிலுள்ள பௌத்தர் ஆலயத்திலுள்ள பொன்னாலான புத்த விக்ரஹத்தை, தந்திரத்தால் எடுத்து வந்து, திரவியமாக்கித் திருவரங்கப் பெருமானின் திருக்கோயில் திருப்பணிகளைச் செய்தார் என குருபரம்பரா ப்ரபாவம் தெரிவிக்கிறது.

**திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த பிரபந்தங்களும் அவைகளின ஏற்றமும் :**

திருமங்கையாழ்வார் ஒருவரே மிக அதிகமான திவ்ய தேசங்களை மங்களா ஸாஸனம் செய்துள்ளார். இவர் 86 திவ்ய தேசங்களை மஙகளா ஸாஸனம் செய்துள்ளார். அதே போல் இந்த ஆழ்வார் ஒருவர் மட்டும மிக அதிகமான பாசுரங்களை அருளிச் செய்துள்ளார். இவர் அருளிச் செய்த பாசுரங்கள் 1361 ஆகும். வடமொழி வேதத்திற்கு சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம என்று ஆறு வேதாங்கங்கள் இருப்பது போல, நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு வேதங்களின் ஸாரமாக அருளிச் செய்த ஆறு பிரபந்தங்களும் அங்கங்கள் ஆகின்றன என்று நம் பூர்வாசார்யர்கள் நியமனம் செய்துள்ளனர். இக்கருத்தை ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் தாம் அருளிச் செய்துள்ள உபதேச ரத்தின மாலையில் 9ம் பாசுரத்தில் 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு, மங்கையர் கோன் ஆறங்கம் கூற...' என்று அருளிச் செய் திருப்பதிலிருந்து தெரிய வருகிறது. தவிர இவர் அருளிச் செய்துள்ள 'திருவெழு கூற்றிருக்கை' என்ற ப்ரபந்தம் 'சித்திரக்கவி' என்ற வகையைச் சேர்ந்தது என்பர் நம் முன்னோர் இதற்கு 'ரதபந்தம்' என்ற பெயருமுண்டு. இதன் லக்ஷணங்கள் 'வீர சோழியம்' என்ற நூலில் கூறப்பட்டுள்ளன. இது திருக்குடந்தை ஆராவமுதன் தேர் வடிவில் அமைக்கப்பட்டுள்ளதாகக் கூறுவர் பெரியோர். தவிர இப்பிரபந்தம் திருக்குடந்தை ஆராவமுதன் விஷயமாக

(48.ம் பக்கம் பார்க்க)

# குலசேகரர் நவிலும் வைகுந்த வழி

இந்து சமயத்தின் இருபெரும் பிரிவுகளில் ஒன்றாய் இலங்குகிற வைணவ சமயம், திருமாலை முழு முதற் கடவுளாகக் கொண்டு தன் சமய தத்துவக் கருத்துக்களைக் கூறுகிறது. தமிழ் இலக்கியத்தில் இவ் வைணவ சமயம் பற்றிய ஆழ்ந்த சமய தத்துவக் கருத்துக்கள் பரவலாக இழையோடுகின்றன. வாழ்வின் பொருளையும் அதன் இறுதி நிலையையும், அவ்விறுதியாம் நிலைத்த பர வாழ்வை அடையயுதவும் பேறுகளையும் வைணவ சமய வழி நின்று தெளிவுடன் இயம்புகிறது. தமிழ் இலக்கியத்தில் வைணவ இலக்கியமாக இலங்கும் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் வைணவ சமயத்திற்கு ஒரு அற்புத பொக்கிஷமாக விளங்குகிறது. 'தெளியாத மறை நிலங்கள் தெளிந்தோமே' என்று வேதாந்த தேசிகனால் போற்றப் பெற்ற இவ் இலக்கியம் வைணவச் சுவைஞர்க்கும் பக்தர்க்கும் அள்ள அள்ள இறை அமுதூறும் அமுதசுரபியாக விளங்குகிறது.

ஸ்ரீ வைணவம் பகரும் திருமந்திரம், துவயம், சரம சுலோகம் என்ற மூன்று மந்திரங்களின் ஆழ்பொருளாக விளங்குகிறது நாலாயிர திவ்வியப் பிரபந்தம். பன்னிரு ஆழ்வார்களின் இறை அனுபவமாக திருமாலின் திவ்விய குணங்களில ஆழங்கால் பட்ட அநத ஆழ்ந்த அனுபூதியை அப்பாடல்கள் பறை சாற்றுதலுடன் சேதனன் உய்யுமாறுள்ள வழிகளையும் தன்னகத்தே கொண்டிலங்குகின்றன. படிக்கப் படிக்க இறைப் பக்தியையும் இறையை நெருங்குகிறோம் என்ற உணர்வையும் ஊட்டவல்ல பாடல்கள் நம் உயிர்க்கு அமுதாகின்றன. பன்னிரு ஆழ்வார்களில் ஒரு ஆழ்வாராக விளங்கியவர் குலசேகரர். இவர் மன்னர் மரபைச் சேர்ந்தவராயினும் திருமால்பால் மீளாக் காதல் கொணடு அவர் வதியும பதிகளைக குறித்துப் பக்திச் சுவை பெருக்கெடுத்தோடும் பல பாடல்களைப் பாடியுள்ளார். இவர் இயற்றியது 105 பாடல்கள் கொணட பெருமாள் திருமொழியாகும். இந் நூல் பத்து பதிகங்களைக கொண்டுள்ளது. திருவரங்கமுடையானைக் குறித்து மூன்று பதிகங்களும், திருவேங்கடநாதனைப் பற்றி ஒரு பதிகமும், திருவனந்தபுரத்தில் கோயில் கொணடருளும் விற்றுவக் கோட்டம்மானைப் பற்றி ஒரு பதிகமும், ஆயச் சிறுமியர் அமலனை எள்கல் பற்றி ஒரு பதிகமும், தேவகியின் குமுறல் பற்றி ஒரு பதிகமும், திருக்கண்ணபுர இறைவனைப் பற்றி ஒரு பதிகமும், தனயன் கான்புகத் தசரதன் புலம்பல் பற்றி ஒரு பதிகமும், தில்லை நகரத் திருச்சித்திர கூடத்தில் தொல்லிராமனாய்த் தோன்றிய கதைமுறை பற்றி ஒரு பதிகமும் அமைந்துள்ளன. நெஞ்சை நெகிழ வைக்கும் பக்திப் பரவசமூட்டும் பக்திப் பனுவல்கள் நிறைந்துள்ளன. அவற்றுள் ஒன்றாக இலஙகுவது திருவிற்றுவக் கோட்டமமானை வேணடிக் குலசேகர் பாடும் பத்துப் பாடல்களாகும். இப்பாடல்களில அவர் எங்ஙனம் இறைவனைத் தஞ்சம் புகுந்து, அவன புகழ் பாடுகிறார் எனக் காணலாம்.

முதல் ஒன்பது பாடல்களிலும் ஒவ்வொரு உவமையின் வழியாக இறைவன் தன்மையையும், அவன் சேதனாகிய ஆன்மாக்களுக்கு அருள் பாலிக்கும் திறத்தையும், உயிர்களின் தன்மையையும், ஆன்மாக்கள் இறைவனைப் பற்ற வேண்டியதின் அவசியத்தையும், பற்றும் வழிகளையும், அவனருளைப் பெறுதறகான வழிகளையும் அழகுறத் தெளிவாக அன்றாட உலகியல் வாழ்வில நிகழும் செயல்களைக் கொண்டு யாவரும் விளங்கிக் கொள்ளும் வகையில் இயம்பியுள்ளார். இது அவரின் ஆழ்ந்த பக்தியின் வேறுபாட்டையும், ஞானத் திறத்தையும் தெள்ளிதின் உணர்த்துகிறது.

முதல் பாடலிலேயே வைணவத் தத்துவத்தின் தலையாய தத்துவமாயும் நோக்கமாயும் ஆனமாக்கள் பற்றவேண்டிய இன்றியமையாத ஒன்றாகவும் கருதப் பெறும் சரணாகதித் தத்துவத்தை விளக்குகிறார். உயர்ந்தவன், தாழ்ந்தவன், அறிவுள்ளவன், அறிவிலி என்ற பேதமற்று யாவரும் அவனைச் சரண் அடைய வேண்டுவது வைணவ நெறியின் முதன்மைக் கோட்பாடாகும். "தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை...' என்று பாடுகிறார். இறைவன் சரணனறி வேறு ஒன்றுமில்லை எனறு உறுதியாகக் கூறுகிறார். ஆத்ம சாதகனுக்கு வேண்டுவது இதுவேயாம். இத்தன்மை ஒருவன உள்ளத்தில் நிறைந்திடின் தானாகவே முக்தி அவனைச் சேரும் என்பது வைணவச் சித்தாந்தம். அதனால் அதை குலசேகரர் முதலில் சுட்டுகிறார். இச் சரணாகதித் தன்மை,

'' அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றி
டினும் மற்றவள்தன்

திரு. Dr. A. ஜெகதீசன்-புத்தூர்.

அருள் நினைந்தே யழும்குழவி!
அதுவேபோன் றிருந்தேனே”
என்றவாறு இருகக வேண்டும்.

இங்குத் தாய் இறைவனுககும், குழவி ஆன்மாக்களுக்கும் ஒப்பிடப் பெறுகின்றனர். தாய் அடித்து விரட்டினாலும் பிறிதொரு புகலிடமின்றி அத்தாயையே பற்றி அழும் குழந்தை போல், பல துன்பஙகள் தரினும் அவற்றால் விலகாது திருமாலையே சரணடையும் ஆன்மா என்பதாகும். அவ்வாறு சரணடையின் முன்னினும் மிக்கு நாராயணன் அருள் புரிவான், தாய் தன் குழவியை அடித்தபின் மிகுந்த பாசத்தோடு அணைப்பது போல. இதனால் உலக உயிர்கள் எந்நிலையிலும் இன்பத்திலும் துனபத்திலும் பொதுவாக இருமைகளில் தாக்குறாது எல்லாம் நாராயணன் அருள என அறிந்து அவனைச் சரணடைய வேணடும.

முதலில தாய்க்கும் சேய்க்கும் இடையேயுள்ள அன்பின் வழி சரணாகதித் தத்துவத்தின் மகிமையை விளக்கியபின் நாராயணனிடம் சரணாகதி கொள்ளும் பான்மையைக் கூறுகிறார். யாவரும் இகழும் செயல்களைக் காதலன் செய்திடினும் அவனையன்றிப் பிறரை அறியாக் குலமகள் போல் குலசேகரர் திருவிறறுவக் கோட்டம்மான் அருளவில்லையாயினும் இறைவனின் பாத மலரடிகளையே கூறுவதாக இயம்புகிறார். குலமகள் என்று உயிர்களை அவர் வர்ணிக்கிறார். நாயக நாயகி பாவம் இதில தென்படுகிறது, வாழ்வில் இன்பமோ துன்பமோ ஸ்ரீமந் நாராயணனின கழல்களைச் சரண எனப் பறறுதலே சிறநத வழி எனறு பகர்கிறா

‘கண்டார் இகழ்வனவே காதலனறுன்
செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக்
குலமகள் போல்’

என்பது அவர் கூற்று.

துயர் செய்யும் வேந்தன கோல் நோககியே குடிகள் வாழ்தல் போனறு பரம்பொருளாகிய திருமால் தன்மை நோக்காவிடினும் அவன் பற்றல்லால் வேறு பற்று அறியாதிருப்பதாகக் கூறுகிறார். நம் துயரங்கட்கும், வேணடுகோட்கும் இறைசெவி சாய்த்து அருள் பாலிக்காவிடினும அவனையே பற்ற வேணடும் என்பது குலசேகரர் கருத்து. இது சரணாகதித் தததுவததின் உயர்நிலையாகும.

இறைவன் தனக்குத் துனபம் தரினும் அப்பரமனையே பற்றும் காரணத்தை வாளால மருத்துவன் அறுக்கினும் அவன்மீதே அன்பு செலுத்தும் நோயாளன் போல் தான் இருப்பதாகக் கூறுகிறார். மருத்துவர் அறுத்தாலும் அது தன நன்மைக்கே என்று உணர்ந்து அவன்பால் நோயாளன அன்பு செலுத்துகிறான். அது போன்றே இறைவன உயிர்க்குத் துன்பங்கள் தரினும் அது உயிரின் நன்மையைக் கருதியேயாகும் என்று உயிர்கள் கருதுவதால் வைகுந்த வாசனையை வழுத்திச சரணடைகின்றன. இறைவன் நமக்கு நன்மை செய்வான் என்பதை அறிநது அவனைச் சரணடைவதே உயிரின பணியாகும்.

“ வாளால் அறுத்துச் சுடினும் மருத்
துவனபால்
மாளாத காதல்நோ யாளனபோல்
மாயத்தால்
மீளாத் துயர்தரினும விறறுவககோட்
டமமா! நீ
ஆளா வுனதருளே பார்ப்பன
அடியேனே.”

என்பது சேரமான் கூற்று.

இறைவனைப் பற்றி அவனது இணையடிகளையே யடையலல்லால வேறுவழி தனககுமன்றிப் பிற உயிர்கட்கும் இல்லை எனகிறார் பரந்த கடலில் திரியும் பறவை எங்குச் செல்லினும் கரையைக காணாது கப்பலின் கூமபைப் பற்றும். அது போன்று உலகத் துயாகளினின்று மீள இப் பரந்த உலகில் எஙகுத திரிந்தும் வழி கிட்டாது திருமாலின் திருவடிகளையே தஞ்சமெனப் பற்றினா.

சூரியன் கதிர்கள் வெப்பத்தைத் தரினும் அச்சூரியனைக் கண்டே மலரும் செஙகமலம் போன்று வெந்துயர்களை அகற்றாவிடினும் திருமாலின திவ்விய புகழிலேயே நெஞ்சுருகி நிற்பேன் என்பர். இறைவன் புகழில் நைந்துருகி அவனை சிநதித்தல் திருமாலடியார்க்குள்ள பெரும் சிறப்பாகும்.

தன்னை இறைவன் மறக்கினும் அவனடிகளையே பற்ற வேண்டுமென்பது குலசேகரர் கொள்கை. பைங்கூழ்கள், வானம் பொய்ப்பது நிறுத்தினும் அதையே எதிர்பார்த்து இருப்பது போன்று இடுக்கணகளால் உழந்தாலும் கோதணடராமனையே மனத்தில் வைத்துத் துதிக்க வேண்டும்.

மண்ணில் பாயும் ஆறுகள் யாவும் இறுதியாகக கடலிலே சென்று கலத்தல் போன்று கார்மேக வண்ணனையே புகலிடமாக்கிப் புகுந்ததாகக் கூறுகிறார். உலகில் பிறந்த உயிர்கள் பலவாறாக இவ்வுலகில் வாழ்நது இறுதியில் பரந்தாமனையே சென்று சேர்கின்றன. அதனால் அவனையே சரண அடைய வேண்டும்.

ஆன்மாக்கள் இவ்வுலகில் வேண்டுவது இறுதியான வைகுந்த பதத்தை யருளும் வாசுதேவனையே யாகும். வேங்கடேசனையே வேண்டி, திரணட செலவத்தை வேண்டாது, வாழும் பக்தனைப் போல் மக்கள் வாழ வேண்டும் என்கிறார்.

“ நின்னையே தான்வேண்டி நீள்
செலவம வேண்டாதான
தனையே தான்வேண்டும செலவம்
போல், மாயத்தால்
மினனையே சோதிகிரி விற்றுவககோட்
டம்மானே
நின்னையே தான்வேண்டி நிற்பன
அடியேனே.”

என்பது அவர் பாடல்.

இப்பாடல்களில் குலசேகரர் இறைவன்பால் செலுத்தும பிரபக்தியின் மேனமையையும, முகுநதனின அருட் சிறப்பையும், எந்நிலையிலும் அவனைப் பற்றும சிறப்பையும தெளிவாக்குகிறார். இறுதியாக இறைவன விரும்பவில்லையாயினும் வேறு பற்றற்று உயிர்கள் அவனையே பற்றி வாழ வேணடும் என்பதும, சரணாகதித் தத்துவமே வைகுந்த வாசனுககு வழி வகுக்கும் எனபதும் குலசேகரர் கருத்தாகும். ★

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்யாயம் — 18.

பகுதி — 15.

ஆழ்வார்கள், நாயன்மார்கள் மற்றும் உலகின் பல பகுதிகளில் அவ்வப்பொழுது தோன்றியுள்ள சான்றோர்கள் பலரது சரித்திரத்தை ஆராய்ந்தால், எக்குடியில், எந்த தேசத்தில் ஒருவன் பிறப்பெடுத்திருந்தாலும், மனபரிபாகததைப் பொறுத்து ஒருவன் மேல் நிலையை அடையலாம் என்ற அடிப்படை உண்மை புலனுகும். உலக வழக்கில் ஒருவன் பிறந்துள்ள குடியைப் பொறுதது அவன் பிராம்மணனு இல்லையா என்பதை மக்கள் தீர்மானிக்கின்றனர். ஆனுல் பரமார்த்திகம் அல்லது வேதாந்தம் ஒருவன் எக்குடியில் பிறந்தவன் என்பதைக் காட்டிலும், ஒருவனது மனபரிபாகம் எத்தகையது என்பதைப் பொறுத்து, அவன் பிராம்மணனு இல்லையா என்பதைத் தீர்மானிககிறது. எந்த தேசத்திலும், எந்தக குடியிலும் பிராம்மணன் தோனறலாம். 'அந்தணர் என்போர் அறவோர்' என்பதுவே, பிராம்மணனுக்குக் குறள் தரும் விளக்கம்.

உண்மையான பிராம்மணனுக்கு— அதாவது பிறப்பால் மட்டும் அல்லாமல் குணத்தாலும்-இருக்க வேண்டிய உயர் பணபுகள் யாவை என பதை இந்த சுலோகத்தில் பகவான் தொகுத்துத் தருகிருர்.

1. அகக்கரணங்களை அடக்குதல்.
2. புறக்கரணங்களை அடக்குதல்.
3. தவம்.
4. அகத்தூய்மை மற்றும் புறத்தூய்மை.
5. பொறுமை.
6. நேர்மை.
7. மறை நூல அறிவு.
8. திரும்பத் திரும்ப மெய்ப்பொருள் பற்றிய ஆராய்ச்சியால் ஏற்படும் சுவானுபவ ஞானம்.
9. இறை நம்பிககை.

முற்காலத்தில் மேற்காணும் குணங்களில் ஒன்ரே அல்லது பலவோ வாய்க்கப் பெற்ற பிராமமணர்கள் பலர் நம் சமுதாயத்திலே இருந்தனர். அதனுல் நாடு சுபிட்சமாயிருந்தது. இன்ரே நிலைமை தலைகீழாக மாறி விட்டது என்பதைச் சொல்லித் தெரிய வேணடியதில்லை.

பிராம்மணனின் நாட்டமெல்லாம் அருளிலேயே இருக்கும் அல்லது இருக்க வேண்டும். அது பொருளில் ஒரு போதும் செல்லாது. வேதத்தைப் பயில்வதும் பயில்விப்பதும் அவனது தலையாய கடமை. அவனைப் பாதுகாப்பது அன்று அரசு மற்றும் சமூகத்தின் கடமையாயிருந்தது. அவனுக்குப் பொய் சொல்லத் தெரியாது. சிந்தனை, சொல், செயலில் அவன் தூய்மையே வடிவெடுத்தவனுயிருப்பான். எங்கும் எதிலும நல்லதையே காணபான். நல்லதையே சொல்லுவான். நல்லதையே செய்வான. இறை நம்பிக்கையில் அவன சதா திளைத்திருப்பான். ஸ்ரீ சுவாமி சிவானந்தர், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீரமணர் போன்ற மகான்களது வாழ்க்கை இதற்கு ஒரு சீரிய விளக்கமாயமைகிறது.

---

பேராசிரியர் டி. கே. நாராயணன
MSc., M Phil,
ஆசிரியர் 'சமயஜோதி' மதுரை.

---

அடுத்து க்ஷத்திரிய கர்மங்களைப பற்றிய விளக்கம் வருகிறது.

சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம
யுததே சாப்யபலாயனம |
தானமீச்வரபாவஸ்ச
க்ஷாத்ரம கர்ம ஸ்வபாவஜம்|| (18-43)

'வீரம், துணிவு, உறுதி, சாதுர்யம், போரில் புறஙகாட்டாமை, கொடை, இறைமை ஆகியவைகள் இயற்கையாக உண்டாகிய க்ஷத்திரிய கர்மங்களாகும்'

முற்காலத்தில் நமது பாரதத்தில் நிகழ்ந்த பல யுத்தங்கள் தர்ம யுத்தங்கள் அல்லது அறப்போர்கள் எனற ழைககப்பட்டன. யுத்தத்திற்கும் தர்மத்திற்கும அன்று அவ்வளவு தொடர்பிருந்தது. அதற்கேற்ப நான்கு வர்ணத்தாருள் வரிசையில் இரண்டாவதாகக் கருதப்படும்.'க்ஷத்திரியன்' அறமே வடிவெடுத்தவன் ஆகிருன். 'க்ஷத்திரியன்' என்ற வார்த்தையின் பொருள் 'உடலில் காயம் பட்டவன்' என்பதாகும். எதற்காக உடலில் காயம் பட்டவன்? சமூகத்தில் உள்ள ஏனையோரைக் காக்கும் பணியில் புண்களை உடலில் தாங்குபவன் என்பது அதன் உட்பொருளாகும், நலத்தை சமுதாயத்தில நிலைப்படுத்த வேண்டி அவன் பல எதிர்ப்புகளைச சமாளிக்க வேண்டியவன் ஆகிருன். தான் அழிந்து பிறருக்கு வெளிச்சத்தை வழங்கும் மெழுகுவர்த்தியைப் போல அவன் பிறர் வாழத் தனது வாழ்வையே தியாகம் செய்யும மனம் படைத்தவனுகிருன். மகாபாரதததில் வரும் பீஷ்மா போன்ற பல பாததிரஙகள் இலட்சிய க்ஷத்திரியர்களுக்கு எடுத்துக்காட்டுகள் ஆகிருர்கள். போரில் புறமுதுகு காட்டி ஓடாமல் வீரப் போர் புரிவது, எத்தகைய இடுக்கண் நேரிடினும் அறத்தை நிலைநாட்டுதலில் அசையாத உறுதி, துணிவு, தன்னுயிரே போவதாக இருந்தாலும் பிறருக்குத் தானம் செய்யும உன்னத கொடைத்தன்மை, இக்கட்டான சூழ்

# பாவை நோன்பு

மார்கழி மாதத்தில் பருவப் பெண்கள், மழை பெய்து நாடு நலன்பெறவும், நல்ல கணவனைத் தாங்கள் அடைய வேண்டியும் ஆற்றுக்குச்சென்று, நீராடி, அந்த ஆற்றுமணலால் பாவையொன்றைப்பிடித்து அந்தப்பாவையைக் கண்ணனாகப் பாவித்து வழிபடுவது பழந்தமிழர் மரபு ஆகும். இதனையே 'பாவைநோன்பு' என வழங்குகின்றனர்.

மேற்படி பாவைநோன்பு ஆன்றோர்கள் காலத்திலிருந்து வழக்கத்தில் இருந்துவருவதாகச் சொல்லப்படுகிறது. இன்றும் பாவை நோன்பைத் தென்தமிழ்நாட்டில் ஆழ்வார் திருநகரைத் தலைமையிடமாகக் கொண்டு 'நவதிருப்பதிகள்' என வழங்கும் பகுதியில் கொண்டாடக் காணலாம்.

வடநாட்டில் பாவைநோன்பை வசந்த ருதுவில் 'காமன் பண்டிகை' எனக்கொண்டாடி வருகின்றனர். காத்யாயனி என்று அழைக்கப்படும் விரதமும் பாவை நோன்பைப் போன்றது என்றே விளம்புவர். சங்க நூல்களிலும் மகளிர் 'மார்கழி நோன்பை முடித்து தைந்நீராடுவர்' என்பதற்கான சான்றுகள் உள்ளன. "பனிநீர் தோய்தலும் பாவையாடலும்' எனவரும் அடி இதனை மேலும் விளக்குமென்பர். மேற்படி பாவை நோன்பை காரணமாகக் கொண்டு ஸ்ரீ ஆண்டாள் நமக்கு அருளிய தேன்சுவை நூல் 'திருப்பாவை' ஆகும்.

மேற்படி நூலில் ஸ்ரீ ஆண்டாள் "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள் பிறந்துவிட்டது; நீராடவாருங்கள்" எனவும் "இது பகவானுக்குரிய நல்ல மாதம் ஆகவே நீராடவாருங்கள்" எனவும் ஆயர்குலச் சிறுமியர்களை அழைக்கிறார்.

ஸ்ரீ ஆண்டாளின் கற்பனையின்படி ஆயர்குலச்சிறுமியர்களுடன் அதுகால் பாவை நோன்பிருக்க ஆயத்தமாகி விட்டார். ஆனால் அவர்களிடம் நோன்பிற்கு வேண்டுவன இல்லையாதலால் அவர்கள் கண்ணனைப் பார்த்து "மாலே! மணிவண்ணா!! மார்கழி நீராடுவான் மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" எனக் கண்ணனை வேண்ட எம்பெருமானும் 'உங்களுக்கு வேண்டுவதைக் கேளுங்கள் தருகிறேன்' எனப் பதில் உரைக்கிறார்.

அதுபோது பெண்கள் "நீலமணிபோன்ற திறத்தை உடைய பெருமாளே! மார்கழி நோன்பிருக்க உன் பாஞ்ச சன்னியத்தைப் போன்ற சங்குகள் வேண்டும். பெரிய கொட்டு மேளங்கள் வேண்டும்: மங்கல விளக்குகள் வேண்டும்; கொடிவேண்டும்; பல்லாண்டு பாடுவோரும் வேண்டும்; ஆலிலைமேல் படுத்து இருப்பவனே! எங்களுக்கு அதற்கு அருள் செய்!!" என வேண்டுகின்றனர்.

அவர்கள் மேலும் கூறுகிறார்கள் "உன்னைப்பாடி நாங்கள் உனது அருள் அடைந்தால் சூடகம், தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடகம் முதலிய ஆபரணங்களை அணிந்தும்; பட்டுப் பீதாம்பரங்களால் எங்களை அலங்கரித்தும், முழங்கை வரை வழியும்படி பாற்சோற்றில் நெய்வடித்து உன்னுடன் கூடி உண்டு மனம் குளிர்வோம். அதுவே எங்களுக்குப் போதும்" எனறும் கூறுகிறார்கள்.

ஸ்ரீ ஆண்டாள் கூறியபடி பாவைநோன்பிருந்து கண்ணனுடன் கலந்துவிட்டால் அதைவிடப் பேரின்பம் ஏது? மகிழ்ச்சியுந்தான் ஏது? வாருங்கள்! மார்கழி நீராட வாருங்கள்!!

—முடிவை முத்து.

நிலைகளில் புத்திசாலித் தனத்துடன் நடந்து கொள்ளும் சாதுர்யம், பிறரை அடக்கி ஆளும் பான்மை போன்ற க்ஷத்திரியனுக்குரிய செயல்களாகும். பயிர்கள் வளருகையில் இடையில் வளரும் களைகளை நீக்குவது எவ்விதம் ஒரு குடியானவனின் கடமையாகிறதோ, அதுபோல சமுதாயமாகிய பயிரில் நல்லவர்களுக்கிடையில் கெட்ட களைகளைப் போல உருவெடுக்கும் தீயோரைக் களைவது க்ஷத்திரியனுடைய கடமையாகும்.

பழைய காலத்தில் நம் நாட்டில் ராஜ ரிஷிகள் பலர் இருந்திருக்கின்றனர். நாட்டைக் காக்கும் அரசனாக இருக்கும் அதே வேளையில் பற்றற்று விளங்கும் ரிஷிபோலவும் வாழ்ந்த பெருமக்கள் அவர்கள். ஜனக மகாராஜா இதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு ஆகிறார். அறத்தை நிலைநாட்டும் தர்ம யுத்தத்தில் தோல்வியடைந்து உயிரை விட நேர்ந்தாலும் வீர க்ஷத்திரியன் மேலான சொர்க்க பதவியை அடைகிறான் என்பது பகவானது கருத்து.

அடுத்து வைசியன் மற்றும் சூத்திரனுடைய கடமைகள் எடுத்தியம்பப் படுகின்றன.

க்ருஷிகோரக்ஷ்ய வாணிஜ்யம்
வைச்யகர்ம ஸ்வபாவஜம் |
பரிசர்யாத்மகம் கர்ம
சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்|| (18-44)

'உழவு, கால்நடை காத்தல், வாணிபம் ஆகியவை வைசியனுக்கு இயல்பாயுண்டான கர்மங்களாகும். இட்ட பணிகளை ஆற்றுவது சூத்திரனுக்கு இயல்பாயுண்டான கர்மமாகும்.'

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்னும் வள்ளுவர் வாக்கிற்கேற்ப அனறாட வாழ்வு வளமாயமைய நமக்குப் பல்வேறு பொருள்கள் தேவைப்படுகின்றன. நம்மைப் பற்றி நாம் ஒரு சில வினாடிகள் சிந்தித்துப் பார்த்தால் பேருண்மை ஒன்று புலப்படும். நாம் உண்ணும் பலவகை உணவுகள் யாவற்றையும் யார் யாரோ எங்கெங்கோ தயாரித்து அளிக்கும் பெரும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதுவே அது. அத்தனைப் பொருள்களையும் தயாரித்தல், சேர்த்தல், பங்கிடுதல், பாதுகாத்தல் போன்ற கர்மங்கள் வைசியர்களின் செயல்களாகின்றன. (தொடரும்)

# இலக்கியத்தில் கார்த்திகை தீபம்

குடும்ப விளக்கு என்னும் போற்று தலுககு உரியவர்கள் பெணகள். சுடர் ஏற்றப்பட்ட விளக்கு, இருட்டை விரட்டிச் சுற்றிலும் ஒளி தந்து தன் பெருமையை நிலைநாட்டுகிறது. அது போலப் பெணகளும் தம் உயர்நத பண்பு நலனகளால் சஙகடஙகளை விலக்கித் தங்கள் குடுமபத்தின் பெரு மையை அனைவரும் அறியச் செய் கிறார்கள். அதனால் பெணகளைக் குடும்ப விளககு என்று நல்லோர் பாராட்டுகிறார்கள். 'மனைக்கு விளக் கம் மடவார்' என்று ஒரு தமிழ் நூலும் கூறுகிறது.

வீட்டின பெருமையை வெளியுல கிற்கு விளககும் இப்பெண்கள், வீட் டிற்குள்ளும விளக்கேற்றி இருளை நீக்கி, மங்கலம் பெருகச செய்கிறார் கள். ஆம்! நாள்தோறும் காலையில் வீட்டையும் வாசலையும் பெருக்கித் தூய்மைப்படுத்திக் கோலமிடுவதைப் போலவே, மாலை நேரத்திலும் வீட் டின் வாசலைப் பெருக்கி நீர் தெளித் துக் கோலமிட்டு அலங்கரிக்கிறார்கள். பிறகு, வீட்டில் விளககேற்றித் தெய்வ வழிபாடு செய்கிறார்கள. இந்துக் களின் வீட்டில் நாள்தோறும் நடக் கும் நிகழ்ச்சி இது.

மாலை நேரத்தில் விளக்கேற்ற வழி படும் இந்த அனறாட நிகழ்ச்சி, கார்த் திகை மாதத்தில் தமிழ்நாட்டில ஒரு திருவிழாவாகவே கொண்டாடப்படு கிறது. இதனைக் கார்ததிகை தீபத் திருவிழா எனறு சொல்லுவாாகள. ஒவ்வொரு இந்துவின் வீட்டிலும திருககோவிலிலும் தீபத் திருவிழா கொண்டாடப்படுகிறது. இளம்பெண கள் மகிழ்ந்து கொண்டாடும் விழா வாக இது இருநது வருகிறது. கார்த் திகை மாதப் பௌர்ணமியில் தீபத் திருவிழா கொண்டாடப்படுகிறது. முழுச் சந்திரன் கார்த்திகை நட்சத் திரத்தைச் சேரும் இரவில், வீட்டின் முன்புறத்திலும் மேல மாடங்களி லும் ஏராளமான விளக்குகளை ஏறறி வைத்து அவற்றின் ஒளியைப் பார்த்து மகிழ்கிறோம். திருககோவில்களிலும் தீபங்களை வரிசையாக ஏற்றி வைத் திருப்பது கணகொள்ளாக் காட்சி யாக இருககும். சைவ வைணவ வேற்றுமையில்லாமல், எல்லாக் கோவில்களிலும தீபத் திருவிழா கொண்டாடப்படுகிறது.

கார்த்திகை தீபத் திருவிழா கொண் டாடுவது பற்றிப் புராணஙகளில் பல கதைகள் காணப்படுகின்றன.

முன்னொரு சமயம் மூனறு அரக்கர் கள் மூன்று கோட்டைகளாக (திரி புரங்களாக) மாறி வானத்தில் திரிந் தார்கள். திரிபுரங்களாகத் திரிந்த அரக்கர்கள், பூமியில் மனித உயிர் களை இரக்கமில்லாமல் நசுக்கிக்கொன் றார்கள். அந்தத் திரிபுரங்களை நோக்கிச் சிவபெருமான ஏளனமாகச் சிரித்தார். அவரது சிரிப்பில் தோன் றிய ஒளி முப்புரங்களை எரிததுச் சாம் பலாக்கியது; அரக்கர்கள். அழிந்தார் கள். இது கார்த்திகை மாதப் பௌர்ணமியில் நடந்தது. உயிர் களைக காத்த இறைவனின் நகை ஒளி யைக் கொணடாடும் வகை யில், இன்றும் கார்த்திகை மாதப் பௌணமி நாளில் வீடுகளிலும் கோவில்களிலும் விளக்கு ஒளி ஏற்றி நாம் வழிபட்டு வருகிறோம் எனறு ஒரு கருத்து சொல்லப்படுகிறது. மனித உயிர்களைக் காத்த மகாதேவ னுக்கு நனறி செலுத்தும் விழாவாக இது திகழ்கிறது.

மறறொரு செய்தி. திருக்கோவில் ஒன்றில் கார்த்திகைப் பௌர்ணமி இரவில், சநநிதியில் எரிநது கொண் டிருநத விளக்கின் ஒளி மங்கி அணைந்துவிடும் நிலையில் இருந்தது. இந்தக் கோவிலில் எலி ஒன்று வசித்து வந்தது. அநத எலி, அன்று தற் செயலாகத் தீபத்தின் திரியை இழுத் தது. அதனால் தீபம் சுடர்விட்டுப் பிரகாசத்துடன எரியத் தொடங் கியது. தெய்வ விளக்கின் ஒளியைத் தூண்டிய புண்ணியத்திற்காக, அந்த எலி அடுத்த பிறவியில் மாவலிச் சக்கரவர்த்தியாகப் பிறக்கும் பேறு பெற்றது. எனவே, கார்த்திகை மாதப் பௌணமி இரவில் விளக் கேற்றி வைப்பது பெரும் புண்ணி யத்தை அளிக்கும் என்று நம்பப்படு கிறது.

கார்த்திகை தீபத் திருவிழா தோன் றியதற்குரிய புராணச் செய்திகள் எப்படி வேண்டுமானாலும் இருக்கட் டும். ஆனால் இவ்விழா பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் கொண்டாடப்பட்டு வருகிறது என் பதற்குச் சங்கத் தமிழ் நூல்களிலும்,

புலவர் பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.,
சேலம்-6

பிற்காலத் தமிழ் நூல்களிலும் ஆதா ரங்கள் ஏராளமாக இருக்கின்றன.

அகநானூறு என்பது சங்கத் தமிழ் நூலாகும். இது 'எட்டுத தொகை' நூல்களுள் ஒனறு. இதில், இரண் டாயிரம் ஆணடுகளுக்கு முற்பட்ட பாடல்கள உள்ளன. பழந்தமிழரின் குடுமப வாழ்க்கையின் சிறப்பை இந் நூல் அழகாக எடுததுக் காட்டுகிறது. கார்த்திகை தீபத் திருவிழா பறறிய குறிப்புகள் இந்நூற் பாடல்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

கன்னிப்பெணணொருத்தி ஓர் ஆண் மகனைக் காதலிக்கிறாள். அவனும் தன் ஆசை முழுவதையும் அவள்

மீதே வைத்திருக்கிறன். இருவரும் திருமணம் செய்து கொள்ளும் முடிவுககு வருகிறாகள. பெற்றோர்கள இவர்களுடைய திருமணத்திற்கு இசையவில்லே. காதலர்கள் இரவோடு இரவாக ஒருவரும அறியாமல் வேறு ஊருக்குப் போய்விடுகிறுர்கள். பொழுது விடிந்தது. பெணணின தாய், நடந்ததை அறிகிருள். 'வீட்டில சிறிது நேரம் பந்து விளேயாடினலும், தோழியரோடு கழங்கு விளேயாடினலும் உடல் வருந்தியது எனறு களேத்துப் போய் வியாவை வழிய என்னேத தழுவிக் கொளளுவாள் என மகள். அப்படிப்பட்டவள், விழா கொணடாடப்படுகினற பழைய ஊரில் நெய்யூற்றி ஏற்றி வைத்த விளக்குகளின சுடர்களேப் போல, பெரிய இலவமரத்தின் பல மலர்கள் வீழ்ந்து கிடககினற காட்டு வழியில் தலேவனுடன சோர்வில்லாமல் எவவாறு நடந்து சென்ருளோ?' என்று அநதத் தாயுள்ளம் கவலேப்படுவதாகப் பாடல் தெரிவிக்கிறது.

நீளரை இலவத் தூழகழி பன்மலர்
விழவுத தலேக்கொண்ட பழவிறல
மூதூர்
நெய்யுமிழ சுடரில தோன்றும்
(அகம்-17)

என்னும் இவ்வரிகளில், கார்த்திகைத் திருவிழாவில் ஊர் முழுவதும விளக்குகள ஏற்றி வைக்கப்பட்டன என்றும், அவ்விளக்குகளினின்றும் வெளிப்பட்ட சுடர்கள இலவமரத்தின் உதிர்ந்த பூக்களேப் போல ஏராளமாக இருநதன என்றும் சொல்லப்படுகிறது.

அகநானூற்றில் மற்ருெரு பாட்டு. பொருள் சம்பாதிப்பதற்காக ஒரு தலேவன் தன் மனேவியைப் பிரிந்து போயிருக்கிறன. வீட்டில் தலேவி வருததமாக இருககிறள். அப்போது அவளுக்கு இனிய கனவுகள் வருகின்றன; நலல சகுனங்கள் நோகின்றன. அதனல தன் கணவன விரைவில் வநதுவிடுவான என்று அவள் நினேக்கிறள். அப்படி நினேக்கும அந்தப் பெண், எல்லோரும் கொணடாடும் கார்ததிகை தீபத் திருவிழாவிற்கு அவர் வநதுவிட வேண்டும் என்று ஆசைப்படுகிறள்.

மழைகால் நீங்கிய மாக விசுமபில
குறுமுயல மறுநிறம கிளர மதி
நிறைநது
அறுமீன் சேரும அகலிருள நடுநாள
மறுகுவிளக் குறுதது மாலே தூககிப
பழவிறல மூதூாப பலவுடன் துவன்றிய
விழவுடன அயர வருகதில அமம
(அகம-141)

'வானத்தில் முழுச் சந்திரன் கார்த்திகை நட்சத்திரங்களோடு சேரும் இரவு நேரததில், பழமை மிகக நம் ஊரில தெருககளில விளக்குகளே வரிசையாக ஏறறி வைத்தும் வீட்டின முன்புறங்களில் மலர் மாலேகளேத் தொங்கவிட்டும் பலரோடு சோநது கொணடாடும் தீபததிருவிழாவைக் கொண்டாட நம் தலேவர் வந்து சேர வேணடும் என்று எதிர்பார்த்து நிற்கிருள தலேவி' என்பது இப்பாடலின் கருத்து. எனவே முழுச் சநதிரன் கார்ததிகை நட்சததிரங்களோடு சேரும் இரவில்தான் தீபததிருவிழா கொண்டாடப்பட்டது என்பதையும், இது கணவனும் மனேவியும் சோந்து கொண்டாடும் விழாவாக விளஙகியது என்பதையும் நாம உணரலாம.

தமிழில் 'பதினெண்கீழ்க் கணக்கு' என்னும தொகுப்பில் பதினெட்டு நூலகள் உள்ளன. இவற்றுள் களவழி நாற்பது எனபது ஒனறு. கி. பி. இரணடாம் நூறருணடில் வாழ்ந்த பொய்கையாா என்னும் புலவரால் இது இயற்றப்பட்டது. சோழன் செங்கணன என்பவனுக்கும சேரமான் கணேக்கால் இருமபொறை எனபவனுககும் நடநத போரின நிகழ்ச்சிகளே இந்நூல் எடுத்துக் கூறுகிறது. இநநூலின 17ஆம பாடலில் கார்த்திகை தீபத்திருவிழா பற்றிய குறிப்பு காணப்படுகிறது. போர்க்களத்தில் வீராகள் ஆளுக்கு ஆள் எதிர்த்து நினறு போர் செய்கிருாகள். அதனல் ஒவ்வொருவருடைய உடம்பும் புணபட்டு இரத்தம் பீறிடுகிறது. வீரர்களின் உடலகளிலிருநது இரததம் வெளிப்படுவது காாததிகை விழாவில் ஏற்றப்பட்ட விளககுகளிலிருநது ஒளி வெளிப்படுவது போல இருக்கிறதாம் இதோ பாடல.

கார்ததிகை தீபத் திருவிழா மறக்க முடியாத ஒரு விழாவாக இருந்ததால் தான், போாக்களத்தைப் பாடவந்த புலவரது பாட்டிலும இவ்விழா இடம் பெற்றிருக்கிறது.

ஆாப்பெழுநத ஞாட்பினுள ஆள்ஆள
எதிர்ததோடித்
தாக்கி எறிதர யீழ்தரும் ஒணகுருதி
கார்த்திகைச சாறறில கழிவிளககைப்
போனறனவே.

மழையின சிறப்பை விளககும் நூல் கார் நாறபது எனபது. இதுவும் பதினெணகீழ்க்கணககு நூல் வகையைச சார்நததே. கணணஙகூத்தனர் எனபவர் எழுதிய கார் நாறபது என்னும் நூலில் காாத்திகை தீபத் திருவிழா பற்றிய செய்தி ஒன்று காணபபடுகிறது. 'மழை பெய்து மலாந்து காணபபடும் தோன்றிப் பூக்கள, காாததிகை தீபத் திருவிழாவின் முதல நாள் விளக்குகளேப் போலக் காட்சியளிககின்றன' என்று இவரது பாடலில் காணபபடுகிறது.

நலமிகு கார்த்திகை நாட்டவர் இடட
தலேநாள விளககில தகையுடைய ஆகிப்
புலமெலாம பூததன தோன்றி

முதல் நாளில் ஏறறப்பட்ட சிறப்பு மிகக விளககுகள என்னும குறிப்பினல, இவவிழா சில நாட்கள் தொடர்ந்து நடைபெறறது எனவும், விழாவின முதல் நாள ஏராளமான விளககுகளே ஏற்றிக் கொணடாடும் வழக்கம இருநதது என்றும உணரலாம். இனறும் கார்ததிகை தீபத் திருவிழாவின போது முதல் நாளில் விளக்குகள் மிகுதியாக இடம் பெறுவதையும் மற்றைய நாட்களில் சில விளக்குகள் மட்டுமே ஏறறப்படுவதையும காணலாம.

(16-ம் பக்கம் பார்க்க)

# பெரியாழ்வார் திருமொழியில் நரசிம்மர்

திரு. சு. இராமலிங்கம,
*காவேரிப்பாக்கம்*

திருமாலிடத்து நீங்காத பறறுடைய வைணவாகள் இறைவனுடைய நிலையைப் பரதத்வம, வியூகம, விபவம், அந்தர்யாமி, அர்ச்சை எனனும் ஐநது வடிவங்களில் காணபர். இவற்றுள் விபவம் என்பது இறைவன் கொண்ட அவதாரஙகளைக் குறிக்கும்.

"ஆதி அ. சோதி உருவை அங்குவைதது
இங்குப் பிறந்த வேத முதலவன"

என்ற திருவாய் மொழி அவ்தாரத்தைப் பற்றி விளககம் அளிக்கும. இத்தகைய அவதாரஙகளை "முக்கிய அவதாரம" என்றும "ஆவேச அவதாரம" என்றும் இருவகைப்படுத்துவர். முக்கிய அவதாரம தேவ,மனித, விலங்கு என்று தம்முள் முப்பிரிவு களைக் கொண்டு அமையும. விஷ்ணு, வாமன அவதாரங்களைத் தேவ அவதாரமாகவும்; இராம, கிருஷ்ண அவதாரங்களை மனிதப் பிரிவிலும்; மச்சம, கூர்மம், வராகம், நரசிமமம் முதலிய அவதாரங்களை விலங்குப்பிரிவிலும அமைப்பர். ஆவேச அவதாரமாகப் பரசுராம பலராம அவதாரங்களைக் கொள்வர்

இவற்றுள் மனிதவடிவம் அல்லாது மிருக வடிவும் அமையாது புதிய நரசிம்மமாக எழுநத அவதாரம் சிறப்பு வாய்ந்தது.

"எங்கும உளன கண்ணன்" என்றும்,
தூணிலும இருபபான் துருமபிலும்
இருபபான இறைவன"

என்றும் அமையும் சிறநத தத்துவத்தைக்மெய்ப்பிக்ககொண்ட அவதாரமாக இந்த நரசிமம அவதாரத்தைப் போற்றலாம். இத்தகைய சிறப்பு மிகக நரசிம்ம அவதாரம் பெரியாழ்வார் திருமொழியில் எவ்வாறு போற்றப்படுகிறது என்பதை இவண நோக்குவோம்.

"பிறஙகிய பேய்சசி முலைச்சுவைத்
துணடிட்டு
உறஙகுவான போலே கிடநத
இப்பிள்ளை
மறங்கொள இரணியன மார்பைமுன
கீணடான்
குறஙகு களைவந்து காணீரே"
குவிமுலையீர வநது காணீரே"
*(திருப்பல்லாணடு-சீதக்கடல் 5)*

பேய்சசியின் விஷப்பாலையும், அவளுடைய உயிரையும் ஒருங்கே உணடு ஒனறுமஅறியாபபிளளைபோல் அவள் மடியில உறங்கிய இப்பிள்ளை முன்பு கோபம் கொண்ட இரணியனைத தனதுடையில இருதத்தி அகனற அவன் மார்பைக் கிழித்துக்கொனறான. அபபிளளையின துடைகளைக் குவி முலையீர வநது காணுஙகள் என் அழைக்கிறார் பெரியாழ்வார்.

ஒரு அவதாரத்தில் மடியிலே படுதது மார்பிலே பாலையுண்டு மாய்க்கின்றான். இன்னொரு அவதாரத்தில் தன் மடியில் கிடத்தி அவன மார்பைக் கிழித்து மாய்ககின்றான. இதைத்தான இறைவனின திருவிளையாட்டு என்று சொல்கினறார்கள போலும்.

அடுத்து எங்கும் இருக்கும இறைவன். அடியவரின் சொல்லை மெய்ப்பிகக உயிரறற தூணிலும் வெளிப்பட்டருளவன் என்ற கருத்தை உறுதிபடுத்த கீழ்க்கண்ட வரிகளைப் படைககிறார்.

"கோளரியின் உருவங கொணடவுணன
உடலம்
குருதி குழம்பியெழக கூருகிரால
குடைவாய
மீள அவன் மகனை மெயமமை
கொளககருதி."
*(செங்கீரைப பருவம் - 2)*

'அவன் மகனை மெய்மை கொளக் கருதி' என்ற வரிபொருள் பொதிநத வரியாகும். இரணியனுக்கும் பிரகலாதனுக்கும் இடையே வாக்குவாதம் நடைபெறுகினறது. 'உன் இறைவன் எங்கிருககினறான" என்று கோபத்துடன இரணியன கேட்க, "எங்கும் இருககின்றான" எனறு மகன சாநதமாகப் பதில் சொலகிறான். அதைக் கேட்டு மேலும் சினம கொண்ட இரணியன், குறிபபிட்ட ஒரு தூணைக் காட்டி "இத்தூணில் இருக்கினறான்" எனறு சொன்ன பிரகலாதனின் வார்த்தையை உணமையென நிலைநாட்டவும, அரக்கமனம கொணடு இறுமாந்து திரிநத இரணியனைப் புடைககவும் வலிமை பொருநதிய சிஙகத்தின வடிவததை எடுத்தான இறைவன.

அதுமட்டுமல்ல. 'எங்கும் இருக்கிறான்' என்ற பதிலைக கேட்டதும் வேறு எங்காவது இருக்கும் இடத்தைக் காட்டி விட்டால் என்ன செய்வது என்று எணணியோ என்னவோ அவன் அளந்து கட்டிய தூணைக் காட்டி "இதில் இருக்கின்றானா" எனறு தட்ட அதே தூணில் வளர்ந்திட்டதாம் வாளுகிர்ச சிங்கம் இனிப் பாடலைப் பார்பபோம்.

"அளந்திட்ட தூணை அவனதட்ட ஆங்கே
வளர்நதிட்டு வாளுகிச சிங்க உருவாய்
உளநதொட் டிரணியன ஒணமார
வகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி"
*(மாணிககக் கிணகிணி - சப்பாணிப்
பருவம் - 9)*

வளர்ந்த அச்சிம்மம் என்ன செய்தது? இரணியன் உளம் தொட்டது. அவன் குறிப்பிட்ட தூணிலும் இறைவன் இருககின்றான எனபதை அறிந்தாவது அவன் திருந்துகினறானா என்பதைப் பார்கக அவன் உளம் தொட்டுப் பார்த்தது. பயன் இல்லை. பின் அகனற மார்பைத் தன் கூரிய நகங்

களால் பிளந்தது. அந்தக் கைகளால் சப்பாணி ஆடு எனகின்ரூர் பெரியாழ் வார். அப்படி இரணியன் நெஞ்சை இரு பிளவாக முன் கிழிந்த இறைவா குருககத்திப் பூசசூடவா என்றழைக் கிருர்.

" இடநதிட் டிரணியன் நெஞ்சை
இருபிள வாகமுன் கீணடாய்
குடநதைக கிடநத எமகோவே
குருககததிப் பூசசூட்ட வாராய் "
(பூச்சூட்டல் - 7)

அரிவுரு கொண்ட இறைவன் இர ணியன் மாய்த்தக் காட்சியை நாமும மனககணணில் காண வேண்டாமா? இதோ காட்சி. நகங்களின் முனைக ளால் பிரகாசமான மார்பு அழுந்தும் படி அழுத்தி அவன் தலையைப் பிடித் துக் கொணடு கிரீடம உடையும்படி, கணகள் பெயர்த்துக கிளமபும்படி வாய் கதறும்படி செய்கிறது சீயம்.

" உரமபறறி யிரணியனை யுகி நுதியால்
ஒளளியமாா புறைகக ஊனறி
சிரமபறறி முடியிடியக் கண்பிதுங்க
வாயலறக கெழித்தான கோயில் "
(திருவரஙகத திருப்பதி - 4-8)

இவற்றைமட்டும் அறிந்து கொண டால் மட்டும மனதிற்கு நிறைவு ஏற் படுமா? எதற்குமே பயனவேணடு மல்லவா? நரசிம்மனுல் நரசிம்ம நாமத் தால் உணடாகும் பயனையும் அறிநது கொணடு முடித்துக்கொள்ளோம.

இதோ பாடல்

" ...........திருககோட்டியூர்
நாதன் நரசிஙகனை நவின்
றேததுவாாகள உழக்கிய
பாததுளி படுவதால் இவ்
வுலகம பாககியம் செயததே "
(திருக்கோட்டியூர் சிறப்பு - 6)

நரசிங்கனைப் போற்றி வணங்குப வர்கள் பாதத்தூளி பட்டாலே இவ் வுலகிறகுப் பாககியம் என்ருல் வேறு ஒனறும் கூறத்தான் வேண்டுமா? நாமும் நாரணனை - நரசிம்மனைப் போற்றி வணங்குவோம்.

---

(14-ம பக்கத் தொடாசசி)

வீடுகளில் மட்டுமன்றிக் கோவில் களிலும் கார்த்திகை தீபத்திருவிழா சிறப்பாகக் கொணடாடப்பட்டு வந் துளளது. நாளும் இன்னிசையால் நற்றமிழைப் பரப்பியவர் ஞான சம் பந்தர். இவர் காலத்தில் சென்னை மயிலாப்பூரில் சிவநேசச் செட்டியார் எனனும் கப்பல் வணிகர் வாழ்ந்து வந்தார். இவருக்குப் பூம்பாவை என்னும் அழகிய மகள் ஒருத்தி இருந தாள். அவள ஒரு சமயம் தோழி களுடன் பூப்பறிக்கச் சென்றிருநத போது பாம்பு தீணட இறந்தாள. மருத்துவங்கள் பல செய்தும் பூம் பாவை பிழைக்கவில்லை. அவளை எரிததுச் சாமபலாக்கிக் குடத்தி லிட்டு வைத்திருந்தனா பெற்ருேர். திருஞான சம்பந்தரை அழைத்து வந்து தம் துயரத்தை வெளிப்படுத் திஞர் சிவநேசச் செட்டியார். திரு ஞான சம்பநதர் அப்போது தேவாரப் பதிகம் ஒனறு பாடி, பூம்பாவையை உயிர் பெற்று எழச செய்ததாக வர லாறு ஒன்று உள்ளது. அவரது பதி கத்தில்,

துளககில் கபாலீச்சுரததான
தொலகாாத் திகைநாள
தையலார் கொண்டாடும்
விளககீடு காணாதே
போதியோ பூமபாவாய்

என்னும் பாடல வரிகள் காணப்படு கின்றன. மயிலாப்பூரில் கபாலீச் சுரா கோவிலில் பெணகள் விளக்கு களை ஏற்றி வைத்துக கொண்டாடும் கார்த்திகை தீபத் திருவிழாவை இநதப் பாடல் சுட்டிக் காட்டுகிறது.

வீடுகளிலும் கோவில்களிலும் மட்டுமல்ல, மலை உச்சிகளிலும் காாத் திகைத் தீபம் ஏற்றி வைக்கும் வழக் கம் இருநதது எனபதைத் திருத்தகக தேவர் எனனும சமணத் தமிழ்ப் புலவர் காட்டுகிருர். இவர் இயற்றி யுளள சீவக சிநதாமணி என்னும் நூற் பாடல ஒனறில், 'குனறில் கார்த்திகை விளக்கிட்டனன' என் னும் உவமையைக் கூறியுள்ளார். கார்த்திகை தீபத் திருவிழாவில் மலை மீது விளக்கு ஏற்றி வைக்கப்பட் டதை இவவுவமை சுட்டிக் காட்டு கிறது. இனறும் இவ்வழககம் இருந்து வருவதை நாம் காணகிருேம். அனல் வடிவமாகச் சிவபெருமான எழுந் தருளியுள்ள திருவணணுமலையில் உள்ள மலைமீது ஆண்டுதோறும் காாததிகை விழாவின்போது பேரொளி ஏற்றி வைக்கப்படுகிறது. 'திருவண்ணுமலை தீபம்' எனறு பல்லா யிரக் கணககான மக்கள் அதனை வணங்கி வருவதை அனைவரும் அறி வார்கள.

அருவினைகள் தீாத்து வாழ்வில் நல் லொளி வழஙகுமாறு, அனலுருவாகி அமாந்தருளும் பெருமானை வணங் கும் நாளே கார்த்திகை திபத் திரு விழா ஆகும. பல ஆயிரம ஆணடு களாக இவ்விழா தமிழ்நாட்டில் கொணடாடப்பட்டு வருகிறது என பதைத் தமிழ் நூல்கள நமக்குத் தெரிவிக்கினறன.





# மார்கழி நோன்பு

மார்கழி நோன்பு பண்டைக் காலத்தில் சிறந்து விளங்கியது என்பதற்கும் அதன் மூல வரலாற்றை அறிந்து கொள்வதற்கும் திருப்பாவையும், திருவெம்பாவையுமே சிறந்த கருவிகள். மார்கழி நோன்பிற்கு வேத விதியில்லை என்றாலும் ஆன்றோர் கைக்கொண்டு ஒழுகுவதே அதற்கு மூலம் என்பது பெரிய வாச்சான் பிள்ளையின் கருத்தாகும். இக் கருத்தை வலியுறுத்த அவர் 'மேலையர் செய்வனகள்' என்று ஆண்டாள் அருளிச் செய்ததை எடுத்துக் காட்டுகிறார். மேலும் அவர், "கோகுலத்துள்ள ஆயர்கள் மழை பெய்யாக் குறையைதீர்க்க வேண்டிக்கண்ணனைத் தலைமையாக நியமித்துத் தங்கள் பெண்களை மார்கழி நோன்பு நோற்கச் சொல்ல, அவர்கள் அதற்கியைந்து பெருமானையும் தோழிமார்களையும் அதிகாலையில் துயிலுணர்த்தி அழைத்துக்கொண்டு, யமுனாநதியில் மார்கழி நீராடி நோற்று, கண்ணபிரானை நாயகனாப் பெறும் தங்கள் மனோரதத்தை அடையப் பெற்றார்கள் என்பதே ஆண்டாள் அருளிய திருப்பாவையின் வரலாறு என்று கருதுகிறார். ஆனால் அவர் கருத்துக்கு ஆதாரமான நூற்பிரமாணம் அவரால் குறிக்கப்படவில்லை. ஆயினும் ஸ்ரீமத் பாகவதம் 'தசமஸ்கந்தம்' 22-ம் அத்தியாயத்தில் கண்ணன் கோபியர் ஆடைகளைக் கவர்ந்த கதையைக் கூறும் தொடக்கத்தே மார்கழி நோன்பு பற்றிய செய்திகள் பின்வருமாறு கூறப்படுகின்றன.

கோகுலத்துப் பெணகள் மார்கழி மாதத்தில் விடியற்காலத்தில் துயிலெழுந்து யமுனா நதியில் நீராடிக் கார்த்தியாயினி விரதத்தைத் தொடங்கினர். அவர்கள் ஈர நுண்மணலால கார்த்தியாயினி தேவியின் உருவத்தை அமைத்து பூஜை செயது, நந்தகோபன் மைந்தனாகிய கண்ணனை எங்களுக்கு நாயகனாக அருள்வாயாக என்று வேண்டினர். இவ்வாறு அவர்கள் கண்ணனை நினைதது்க் கொண்டு ஒரு மாத காலம் பூஜை செய்து விரதத்தை விடாமல் நடத்தி வந்தனர்.

அக்கோபியர் ஒரு நாள் யமுனையில் நீராட விடியற்காலையில் துயிலுணர்ந்து அவரவர் தோழிமார்களின் பெயர்களைச சொல்லி அழைத்து ஒருவருக்கொருவர் கையைக் கோர்த்துக் கொண்டும் கண்ணன் புகழ்களைப் பாடிக்கொண்டே நீராடினர். கண்ணன் அப்பெண்களின் விரதபலத்தை அளிப்பதற்காக அங்கு வந்து அம்மகளிற் ஆடைகளையெல்லாம கவர்ந்து கொண்டு பக்கத்திலுள்ள கடம்ப மரத்தில் ஏறி நின்றான். நீராடி முடித்த பெண்கள், 'ஆடையின்றி வாடையின் மெலிந்து கையது கொண்டு மெய்யது பொத்தி'க் 'கண்ணனிடம்வந்துஆடைகளைத் தந்தருளுமாறு வேண்டினர். கண்ணனும் 'சதிகளாகிய நீங்கள் எந்த நோக்கத்தைக் கொண்டு கார்த்தியாயினி விரதத்தை நடத்தினீர்களோ அந்த மனோரதம் இன்றிரவில் என்னுடன் கூடி விளையாடுவதால் நிறைவேறும்' என்று சொல்லியருளினன். இவையே அச் செய்திகள்.

---

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

---

இப்பாகவதச் செய்தியையும் பெரியவாச்சான் பிள்ளை கூறும் திருப்பாவை வரலாற்றையும் காட்டி நோக்குமிடத்து, நாடு வளங்குன்றிய போது மழை பெய்யவும், உத்தம நாயகர்களை அடைந்து இம்மை நலமெய்தவும் வேணடிக் கன்னிப் பெண்கள் கார்த்தியாயினி தேவியைக் குறித்து மார்கழி மாதம் முழுவதும் நோற்பதும், அதன் பொருட்டு அவர்கள் வைகறையில் துயிலெழுந்து ஒருவரையொருவர் உறக்கத்தினின்றும் எழுப்பிச் சென்று ஆற்றை அடைந்து நீராடித் தேவியின் படிமம் அமைத்துப் பூஜை செய்வதும் பண்டை மரபு என்பது பெறப்படுகிறது.

மேலும், திருப்பாவைப் பாசுரங்களின் ஈறுகள் தோறும் வரும் 'எம்பாவாய்' என்ற தொடர் ஈர நுண்மணலால் அமைக்கப்பட்ட தேவியின் உருவத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஏனெனில் பாவை என்பது, 'கொல்லிப்பாவை' என புழிப்போல ஈண்டுப் பெண் தெய்வத்தின் படிமையைக் குறிப்பதாகும். 'நம்பாவைக்கு செய்யும் கிரிசைகள்' 'நம் பாவைக்கு சாற்றி நீராடினால்' 'பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்' என வரும் திருப்பாவைத் தொடர்களி

கும் குறிப்புத் தோன்றுதல் காண லாம். ஆனால் 'பாவை' என வரும் இடங்களிலெல்லாம் உரையாளர்கள் 'நோன்பு' என்றே பொருள் கண்ட னர். 'நோன்பு' என்ற பொருளிற் 'பாவை' என்ற பெயர் வேறிடத்து வழங்குதல் அருமை. அதனால் அப் பொருளும் வணங்கப் பெற்ற வடி வம் அடியாக வந்ததென்றே கொள் ளத் தக்கது.

திருமால் பக்தியிற் சிறந்த ஆண் டாள், தேவி விரதத்தை மூலமாகக் கொண்டு திருப்பாவை பாடினர் என்று சொல்லுவது பொருந்துமா என்று சிலர் ஐயுறக்கூடும். கண்ணனைத் தம் நாயகனாக அடைவதற்குக் கோபி யர் கார்த்தியாயினி தேவியை வணங் கின செய்தி பாகவதத்தால் வெளி யாகும் போது, அக்கோபியர் செய்தி னர் என்பதில் இழுக்கு ஒன்றுமில்லை. கண்ணனைத் தன் கணவனாக அடைய வேண்டி 'உன்னையும் உம்பியையும் தொழுதேன்' எனக் காமனையும் அவன் தம்பியாகிய சாமனையும்கூடத் தொழுத ஆண்டாள் தேவியை வணங்கி அப்பெருமானைப் பெற முயன்ற கோபியர் செய்தியைக் கூறி யதில் குற்றம் ஒன்றும் இல்லை.

மார்கழி நோன்பு நோன்பு நோற் கும் காலத்தில் கன்னியர் நிகழ்த்தி வந்த கிரியைகளை ஆண்டாள் திருப் பாவையின் இரண்டாவது பாசுரத் தாலும், இந்நோன்புக் காலத்தே வழங்கும் வாத்தியங்களையும் விருது களையும் இருப்பத்தாறுவது பாசுரத் தாலும், இந்நோன்பு முடிந்ததும் மகளிர் கொள்ளும் கோலத்தையும் விருந்தையும் இருபத்தேழாவது பாசு ரத்தாலும், பயன் மழை பெய்து நாடு செழித்த லும் பசுக்களின் வளமும் ஆகும் என் பதை மூன்றாவது பாசுரத்தாலும், இந்நோன்பைக் கன்னியர் நோற்பது தாம் ஒப்புயர்வற்றதலைவரை மணந்து உய்வதற்கே என்பதை இருபத்தொன் பதாவது பாசுரத்தாலும் அறியலாம். திருப்பாவை இருபத்தொன்பதாவது பாசுரம் குறிக்கும் பயனையே, திரு வெம்பாவையின் ஒன்பதாவது பாசுர மும் பத்தொன்பதாவது பாசுரமும் குறிப்பிடும். இவ்வாறு இம்மைப் பயன் கருதிக் கன்னியரால் ஆதியில் கைக்கொண்டொழுகப் பெற்ற மார் கழி நோன்பானது மறுமை கருதி அடியார்களால் பக்தியோடு பாடப் பெறும் பெருமை வாய்ந்தது.

---

# அஷ்டாங்க யோகம்

பகவானைத் தியானிப்பதிலேயே சிந்தனையை நிறுத்தி, சகல பந்தங்களையும் துறந்து ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் ஐக்கியப்படுத்துவதே யோகம் எனப்படும். அதற்கு எட்டு கட்டங்கள் (நிலைகள்) உண்டு.

எந்த உயிருக்கும் தீங்கு செய்யாதிருத்தல், உண்மையே பேசுவது, பொருளில் ஆசை இல்லாதிருத்தல், புலன்களின் அடக்கம், தானம் பெற விரும்பாமை, இலாபம் அடைவதில் விருப்பம் கொள்ளாதிருத்தல் ஆகியவற்றில் ஒருவன் திடசித்தத்துடன் கடைபிடிப்பது யமம் எனப்படும்.

"ஒழுக்கம் விருப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப்படும்."

என்பது திருவள்ளுவர் வாக்கு. அதற்கு ஏற்ப வாழ்க்கையில் ஒழுக்கத்தைக் கடைபிடித்து சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளவாறு நடப்பதானது வாழ்க்கையில் விரும்பியதை அடையச் செய்யும். அவ்வாறு வாழ்க்கையில் ஒழுக்கத்தைக் கடைபிடிப்பதே நியமம் எனப்படும்.

புனிதத் தன்மை, திருப்தி, தவம் முதலான காரியங்களைக் கடைபிடித்தல், எப்போதும் இறைவனுக்குத் தொண்டு செய்வது ஆகிய குணங்களை ஒருவன் கைக்கொள்ள வேண்டும். எந்த உயிருக்கும் துன்பம் தரக்கூடாது.

எப்போதும் உண்மையே பேச வேண்டும். ஓர் உண்மையை எடுத்துச் சொல்வது துன்பத்தையே தோற்றுவிக்கும் என்றால் அதைச் சொல்லாமல் இருந்து விடுவதே சிறந்தது.

பிரம்மசரியத்தைக கடைபிடிக்க வேண்டும். தெய்வ பக்திக்கு அதுவே அடிப்படையாக அமைந்திருக்கிறது. மதுவை மூன்று வகையாகக் கூறுவர். கௌதி, பைஷ்டி, மாத்வி என்பவையே அவைகள். பெண்ணை நான்காவது மதுவாகச் சொல்வர். இன்ப விஷயங்களில் மனம் ஒரு போதும் நாட்டம் கொள்ளக் கூடாது. சன்யாசியானவன் தன்னுடைய அன்றாட உபயோகத்துக்கான பொருள்களைத் தவிர மற்றவற்றில் ஆசை கொள்ளக் கூடாது. இரண்டு ஆடைகளுக்கு மேல் துணிமணிகள் இருக்கக்கூடாது. உணவு உண்ணும் கலம், காலணிகள், பொருள்களை வைத்துக் கொள்ள ஒரு கைப்பை, படுப்பதற்கு உபயோகப்படும் ஒரு போர்வை ஆகிய இவற்றுக்குமேல் அவனிடம் பொருள்கள் இருக்கக்கூடாது. குளிர்காலங்களில் உடலை போர்த்திக் கொள்ளவே அந்த போர்வை. உடல் ஆரோக்கியமாக இருந்தால் தானே மற்ற காரியங்களை நடத்திச் செல்ல முடியும்.

ஒருவன் உள்ளும் புறமும் சுத்தமானவனக இருக்க வேண்டும். நாள் தோறும் விதிப்படி நீராடி உடலையும், பகவானைத் தியானித்து சித்தத்தையும் புனிதமாக்கிக் கொள்ள வேண்டும் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன் ஆகுல நீர பிற' என்பது திருக்குறள்.

புலன்களைக் கட்டுப்படுத்தி ஒரு வழியிலேயே நிலைக்கச் செய்வதற்கு தபஸ் என்று பெயர். தபஸை மூன்று வகையாகக் கூறுவர். வாய்மொழியால் கடைபிடிப்பது, மனத்தால் கடைபிடிப்பது, தேகத்தால் கடைபிடிப்பது என்று மூன்று விதமாகும். உண்மையே பேசி எப்போதும் இறைவனுடைய மந்திரங்களை ஜபித்து அவரைத் துதிப்பது வாக்கினால் கடைபிடிக்கும் தபஸாகும். மனத்திலே ஆசாபாசங்களை அறவே ஒழித்து எப்போதும் பகவானுடைய தியானத்தையே கொள்வது மனத்தினல் கடைபிடிகும் தபஸாகும். இறைவனுக்கு சேவை புரிவது தேகத்தால் கடைபிடிக்கும் தபஸாகும்.

ஒருவன் தியானத்தில் அமரும் போது தரையில் ஆசனம் போட்டு அதன்மீது பத்மாசனமிட்டு அமர வேண்டும். தரையில் போடப்படும் ஆசனம் துணியாலோ, தோலாலோ, தர்ப்பையைப் பரப்புவதாலோ அமையலாம். தலையை நன்கு நிமிர்த்திய நிலையில் அமர்ந்திருக்க வேண்டும். அவன் முதுகு ஒரு போதும் வளைந்திருக்கக் கூடாது. மூக்கு நுனியைக் கணகள் பார்க்க வேண்டும்.

இவ்வாறு ஆசனமிட்டு அமர்ந்த பின் பிராணுயாமம் செய்ய வேண்டும். ரேசகம், பூரணம், ஸ்தம்பனம் என்ற முறைப்படி காற்றை உள்ளுக்குள் இழுத்து சிறிது நிறுத்தி பிறகு வெளியே விட வேண்டும். இந்த

---

**திரு. கே. நாகராஜன்-திருக்குணம்.**

---

பிராணுயாமம் உத்தமம், மத்திமம், கன்யாசம் என்று மூன்று வகைப்படும். முப்பத்தாறு எண்ணும் வரை இருப்பது உத்தமம் என்றும், இருபத்து நான்கு எண்ணும் வரை இருப்பது மத்திமம் என்றும், பன்னிரண்டு எண்ணும் வரை இருப்பது கன்யாசம் என்றும் சொல்வர். பிராணுயாமம் மந்திரத்தோடு கடைபிடித்தல் என்றும், மந்திரமில்லாது கடைபிடித்தல் என்றும் இருவகைப்படும். கர்மாக்களைச் செய்யும்போது மந்திரத்துடன் பிராணுயாமம் கடைபிடிக்க வேண்டும். மற்ற சமயங்களில் மந்திரமில்லாமல் பிராணுயாமம் செய்வதே உத்தமம். அது புலன்களைக் கட்டுப்பாட்டிற்கு கொண்டு வருகிறது. பொதுவாக பிராணுயாமம் செய்வதால் மனிதனுக்கு அறிவுப் பிரகாசமும், ஆன்மப் பிரகாசமுமாகிய ஓஜசும், முகவசீகரமும், தேகக் கவர்ச்சியுமாகிய தேஜசும் விருத்தியடையும். இந்த உடலை ஓர் இரதமாகவும், புலன்களை அந்த இரதத்தை இழுத்துச் செல்லும் குதிரைகளா

கவும், பிராணாயாமத்தைக் குதிரை களை அடக்கி நடத்திச் செல்லும் கடிவாளமாகவும் சொல்வர்.

தியானம் என்பது சிந்தனையை பகவான்மீது ஒரு முகப்படுத்துவதாகும். பகவானைப் பற்றிய சிந்தனையைத் தவிர வேறு ஒருவித சிந்தனையும் இருக்கக் கூடாது. உள்ளத்திலே பகவான் இருப்பதாகத் தியானிக்க வேண்டும். நாபிக் கமலத்தில் எட்டு இதழ்களுடைய தாமரைமலர் கோடி சூரியப் பிரகாசத்தோடு மலர்ந்திருப்பதாகவும் அதன் மத்தியிலே ஸ்ரீமகாவிஷ்ணு நான்கு அல்லது எட்டுக்கைகளுடன் அமர்ந்திருப்பதாகவும் தியானம் செய்ய வேண்டும். பகவான் கைகளில் வில், ஜபமாலை, சங்கம், சக்கரம், தாமரை மலர், கதை, பாசம், தண்டம் ஆகியவற்றைத் தாங்கியிருப்பதாகவும் பொன்னிற மேனியை உடையவராகவும், அவர் தன் அழகிய திருமார்பிலே கௌஸ்துபமணியுடன் ஸ்ரீவத்ஸம் எனப்படும் மறுவும் உடையவராகத் தியானிக்கப்பட வேண்டும்.

பகவானைத் தியானித்தத் தோற்றத்தை அப்படியே சிந்தையில் ஸ்திரமாக இருக்கச் செய்வதே தாரணை எனப்படும்.

சமாதிஎன்பதுஒருவன்உலகத்தைப் பற்றியும் தன் தேகத்தைப் பற்றியும் உள்ள நினைவை அறவே ஒழித்த நிலையாகும். காற்று வீசாத அறையிலே வைக்கப்பட்டிருககும் விளக்கின் சுடர் ஆடாது அசையாது இருப்பது போலவும், அமைதியோடு கூடிய நீர் நிலைகளைப் போலவும் அவன் அமர்ந்திருப்பதாகும். பகவானுடைய திவ்ய தோற்றத்தைச் சிந்தனையில் ஸ்திரப் படுத்திய அவன் ஆனந்தமான அதன் நினைவிலேயே தன்னையும் சுற்றுமுள்ள சூழ்நிலையையும் மறந்து கட்டை போல அமர்ந்திருப்பான். இந்த தேகம் தன்னுடையது, இது தன்னுடைய புலன்கள் என்ற உணர்வே அவனிடம் இருக்காது. எந்த சப்தத்தையும் அவனால் கேட்க முடியாது. எவ்வித உணர்ச்சிகளையும் அவனால் அறிந்து கொள்ள முடியாது.

இவ்வித நிலையை அடைந்தவனே அஷ்டாங்க யோகம் கைவரப் பெற்ற யோகவானாவான். அவனுடைய ஜீவன், தான் வேறு பரமாத்மா வேறு என்ற பேதத்தைக் காணாது அதனோடு ஐக்கியப்பட்டு இருக்கும். ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்கியப்படுதலே முக்தியாகும்.

## மானுடம் வென்றதம்மா!

"மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்"

என்று சூளுரைத்தாள் அச்சுடர்க் கொடி. அதில் முழு வெற்றியும் கண்டாள் அக்கோதை. ஆண்டாளின் அதிசய வரலாறு இது. மானிட ஜென்மம்-பெண் ஜென்மம் அடைந்த அப்பாவையின் சாதனைக்கு ஈடும் இல்லை, இணையும் இல்லை. அசைக்க முடியாத உறுதி. அளவிட முடியாத ஆர்வம். இவைகளே, அவளுடைய வெற்றிப் பாதைகள். அரங்கனையே சரணம் அடைந்தாள். அவனையே கரம் பிடித்தாள். எங்கும் அரங்கனோடு கர்ப்பகிரகம் கொண்டாள். உலகம் கண்டது உண்டா இந்த உண்மை? கேட்டது உண்டா இந்த கீர்த்தி? ஆ! ஆ! ஆண்டாள் கண்ட அரும்பெரும் வெற்றி இது! மானுடம் கொண்ட மகத்தான வெற்றி இது!

ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

## கோவில்களில வலம் வருவதிலுள்ள நியமங்களில் சில

விநாயகரை ஒரு தடவை, சூரிய நாராயணனை இரண்டு தடவை, சிவனை மூன்று தடவை, நாராயணனை நான்கு தடவை, அரச மரத்தை ஏழு தடவை, நவக்கிரகத்தை ஒன்பது தடவை வலம் வருதல் வேண்டும். குறிப்பிட்ட அளவிற்கு அதிகம் வலம் வருவது நல்லதே.

வலம் வரும்போது வேகமாக நடப்பதோ, அதிக இடைவெளி ஏற்படும் வகையில் அடிகளை நீட்டி வைப்பதோ கூடாது. அடிமேல் அடி வைத்து, கைகளை வீசி நடக்காவண்ணம் கூப்பிய கரத்துடன், வாயால் வேறு பேச்சுக்கள் பேசாமல், இறைவனின் துதி பாடிக்கொண்டு, மனத்தை அவன்பால் செலுத்தி வலம் வருவதே உடலுக்கும், உள்ளத்திற்கும் பலன் அளிக்கக் கூடியது.

திருமதி. கமலவேணி தனபதி.

# திருக்கார்த்திகை தீபம்



திருவண்ணமலைத் திருககோயில முகப்புத்தோற்றம்,

"கார்த்திகைப் பெண்ணுள் வருகின
ருள்—இருள
போர்த்தியப் போர்வையை நீக்கு
கின்றுள்
ஆர்த்தெழும் காலைக் கதிர்போலே—
மாலை
நேர்த்தியாய் ஒளியைத் தருகின்றுள்.

காரிருள் போன்ற மனவிருளை—அக்
காரிகை மாற்றிட வருகின்றுள
கோரிய வரங்கள் நிறைத்திடவே—
தீபக்
காரிகை அருளொளி காட்டுகின்றுள."

"வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்
தம்
உள்ளததனைய துயர்வு"

என்பது வள்ளுவப் பெருந்தகையின் பொய்யா மொழி.

நீரின் தன்மைக் கேற்ப அதாவது நீர் நிலைகளில் நீரின் உயர்வுக்கும், குறைவுக்கும் ஏற்ப தாமரை, அல்லி போன்ற நீர்நிலைத் தாவரங்களின் மலர்கள் நீர் நிலைகளின் மேல்மட்டத்தில் இருந்து வருவதுபோல் உள்ளத்தில் தோனறும் உயர்வான எண்ணங்களுக்கேற்ப உயர்ந்த நினைவுகளே உயர் தன்மைகளாகப் பரிணமித்து, இறைவனை வழிபட்டுச் செலுத்தும பக்திக்கேற்ப இறைவன் அருளும் கிடைக்கின்றது என்பது தானே இதன் உண்மைப் பொருள்.

எனவே மனமானது இறைவன் தாளினைப் பணிந்து, போற்றிப் புகழ்ந்து செலுத்தும் பக்திக்கேற்ப மாந்தர் தம் வாழ்வும் உயர்வடைகின்றது. அவ்வாறுயின் இறைவன் எவ்விடத்துறைந்துள்ளான்? அவன் தன்மையை உணர்வதெப்படி? எனப் பலவாறு சிந்திக்கத் தோன்று வண்ணம் யாவருக்கும் பொதுவாய், ஜாதி, சமய வேறுபாடுகள் இன்றி யாவற்றிற்கும் அப்பாற்பட்ட தேசிய ஒரு பாட்டிற்கு வழிகாட்டும் தன்மையாய் இறைவன் இருந்து அருள் பாலிப்பதை, இறைவனே கூறுகின்ற அருள்மொழியை சற்றே உற்று நோக்குவோம்.

"என்னை எங்கும் தேட வேண்டாம் என்றும் உங்கள் அருகிலேயே இருக்கின்றேன். ஒளி மயமான உங்கள் வாழ்வுக்கு வழிகாட்ட தீப ஒளியாக நான் இருக்கின்றேன்" என்று ஜோதி வடிவாக இறைவன் அருள் பாலிக்கின்றுர். இதையே வைணவ சித்தாந்தமும் தீபமாகத் திருமாலும், சுடர் ஒளியாக லெக்ஷ்மியும் இருப்பதாகத் தெளிவுபடுத்தும்.

இறைவன் ஸ்ரீ கிருஷ்ணவதாரத்திலே கோபிகாஸ்திரீகளோடு ஆனந்த நடமிடும்காட்சிவிளக்கப்படும்போது, பக்தி செய்யும் அனைவருமே கோபிகாஸதிரீகளாகவும் இறைவனைத் தீப ஜோதியாக அமைவுறுத்தியும்

திரு. வெ. சுந்தரம் — பரமக்குடி.

தீபப் பிரதக்ஷண வழிபாடு நிகழ்த்தப் படுகிறது. அது போழ்து கண்ணனை நாயகனுகவும், பக்தி செய்வோரும், பஜனை செய்வோரும் நாயகிகளாகவும் பாவனை கொண்டு இறைவன் திருநாமங்களைப் பாடிப் பஜிப்பதாலேயே 'நாமாவளி' என்று இறைவன் திருநாமங்களைக் கூறுவதையும் உணர்ந்திடல் அவசியமாகின்றது.

நாமாக, நான என்னும் அகந்தை நீக்கி 'நாம்' என்னும் பொதுநோக்கைக் கொண்டு எல்லா மாந்தரையும் ஒன்றுபடுத்திப் பக்தி செய்வதாலும் 'நாமாவளி' என்ற பதம் பயன் படுத்தப்படுகின்றதென்றும் கொள்ளலாம்.

புரட்டாசி மாத சனிக்கிழமைகளிலே எல்லாக் கோயில்களிலும், மடங்களிலும், வார வழிபாட்டிடங்கள் யாவற்றிலும் தீபப் பிரதக்ஷண வழிபாடு நடைபெற்று வருவதும் இக்கருத்தையே வலியுறுத்திப் பக்திக்கு வித்திடுகிறது.

கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடிய நன்னாளில் திருக்கார்த்திகைப் பெரு விழா கொண்டாடப்படுகிறது. பௌர்ணமி நாளில், பௌர்ணமி விரத பூஜையினைப் பெண்கள் செய்து பொருட் செல்வமும் அருட் செல்வமும் கிடைக்கப் பெறுதல் கண்கூடு.

பௌர்ணமியில் செய்யப்படும் செயல்கள் சீரிய முறையில் அமைகின்றன. உயர் செயலோ, தீச் செயலோ எதுவாயினும் பௌர்ணமியில் செயல்படுவது, செயல்களின் சிறப்புக்குச் சாலச் சிறந்ததாகின்றது. சமீப காலத்தில் தினத்தாள்களில் வெளி வந்த ஓர் உண்மையை இங்கே ஒப்பிட்டு நோக்க வேண்டியுள்ளது. அதாவது அமாவாசை நாட்களில் நடைபெறும் குற்றங்களைக் காட்டிலும் பௌர்ணமி நாட்களில் கொலை, களவு, தற்கொலை போன்ற குற்றங்கள் அதிகம் நடைபெற்றுள்ளதாகப் புள்ளி விபரம் தெரியப்படுத்துகின்றது.

இதனை உணர்ந்தே நம்முன்னோர், பௌர்ணமி நாட்களில் நற்செயல்கள் நிகழ்த்த, இறையருள் கிட்டுமாறு பக்தி செய்திட ஒவ்வொரு மாதத்தின் பௌர்ணமி காலங்களில் கோயில்களில் திருவிழாக்கள் ஏற்படுத்தி, மக்கள் யாவரும் நல்லெண்ணமுடன் நற்செயல் செய்திடவும், நாடு நலமுறவும் ஆன்ற நற்செயல்களால் அறவழிப்படுத்தினர் போலும்.

திருக்கார்த்திகை நாளில் திருவண்ணாமலையில் சிவபெருமான் ஜோதி வடிவாகக காட்சி தருவதையும், ஒவ்வோர் ஆண்டும் பல லட்சம் பக்தர்கள் தரிசித்து வருவதையும் கண்டும், கேட்டும் களிப்புறுகின்றோம். அதே சிவஜோதியை இல்லங்களிலும் கண்டானந்தம் கொள்ள, தீபங்களின் ஒளியினால் பிரகாசிக்கச் செய்வது பெண்களின் சிறப்பான செயலாகின்றது.

இல்லத்திருக்கும் திருமகள், இறையாகிய திருமகளை இல்லத்தமர்த்துவதற்காக ஒளி ஏற்றும் வேள்வியாக அல்லவா இவ்விழா அமைகின்றது.

இல்லத்திலே தெய்வத் திருஉருவங்களின் முன்னிலையில் ஐந்து முகம் கொண்ட தீபம் ஏற்றி வைத்து அத் தீபத்தினைச் சுற்றி, பலவிதமாகிய சிறிய, பெரிய தீபங்களையும், அகல் விளக்குகளையும் ஏற்றி வைத்து ஜோதி வடிவான இறைவனைப் பூஜித்து, இல்லத்தின் வாயிலில் கோலமிட்ட இடமுதல் எல்லாப் பகுதிகளிலும் இல்லத்தில் விளக்கின் ஒளியால் பிரகாசிக்கச் செய்யும் வேள்வியை பெண்கள் செய்கின்றனர். இல்லத்தின் நடுநாயகமான, பிரதானமான பகுதியில் கோலமிட்டு அழகுபடுத்திய வேள்விச் சாலையில் யாக குண்டமாகக் கொள்ளக் கூடியதான இடத்திலே ஐந்து முகக் குத்து விளக்கினை வைத்து, பெண்கள் கூடி இறையுணர்வு பொங்கிப் பெருக, பக்திப் பாடல்களைப் பாடி ஒளிமிக்க வாழ்வு அமைய வேண்டுகின்றனரே! இது தானே உயர்வான, மகத்தான வேள்வியாகும்!

இவ்வுலகம் பஞ்சபூத சக்தியால் இயங்குகின்ற தென்பதை புராணம் முதல் இன்றைய அறிவியல் வரை யாவராலும் ஏற்கப்பட்டதே! பஞ்சபூத சக்திகளான நிலம், நீர், நெருப்பு,




ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில், திருப்பதி — எம். ராஜலக்ஷ்மி.

வாயு, வான் என்பவைகளாக இறைவன் இருந்து அருள் பாலிப்பதைக் காட்டுவதே சுயம்புலிங்கம், அப்பு லிங்கம், ஜோதிர்லிங்கம், ஜீவலிங்கம் (சிவலிங்கம்), ஸ்படிகலிங்கம் எனப் பலவாறு விளக்கி அவற்றிற்கேற்ப சிவஸ்தலங்களும் அமைந்தன.

பஞ்ச பூதங்களிலே ஜோதியாக இறைவன் நம் வாழ்விற்கு ஒளி தரும் வள்ளலாக இருப்பதை விளக்கிடவே, கார் நிறைந்து இருளை மிகைப்படுத்தும் கார்த்திகை மாதத்தில், பௌர்ணமியும், கார்த்திகையும் கூடிய நாளில் தீப ஒளியாக விளங்கும் ஜோதி சொரூபனைக் கனிந்து பிரார்த்தித்து, தீய எண்ணங்கள் யாவும் சுட்டெரிக்கப்பட்டு, அருளொளி பெற வழிபடுமுறை ஏற்படுத்தப் பட்டது.

சிவனுக்குரிய நாள் மட்டும் அல்லவே—சிவனின் மற்றொரு அம்ஸமான முருகனுக்கும் உகந்த நாளல்லவா இக்கார்த்திகைப் பெருநாள். திருமாலே தீபமாகவும் லட்சுமியே ஜோதியாகவும் இருப்பதாக வைணவர்களும் திருக்கார்த்திகையைச் சிறப்புறக் கொண்டு விழா எடுப்பதைக் காணும்போது இனபேதமற்ற, சமய சார்பற்ற ஒருமைப் பாட்டு விழா—ஒளிமிக்க நல்விழா இக்கார்த்திகை தீப விழா என்பது தெளிவாகும்.

இந்நிலத்தினை ஐவகையாக்கி அவை கட்குக் குறிஞ்சி,முல்லை,மருதம், நெய்தல், பாலை எனப்பெயரிட்டனர். ஐவகை நிலப்பிரிவிற்கும் பொதுவுடைமையானது இத்தீபத் திருநாள்.

ஐவகைப் பொறிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஒருமையான உணர்வினோடு, இறைவனே யாவற்றிற்கும் துணை எனக் கொண்டு வழிபட வேண்டாமா?

ஐவகைப் புலன்களான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவற்றிற்கு ஆதார சுருதியான இறைவனை அங்கெங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் ஆனந்த மூர்த்தியாம் பரம்பொருளை ஜோதி வடிவில் ஐந்து முக தீபத்தில் கண்டு ஆனந்தம் பெற்றுய்ய அமைவாக்கப் பெற்ற தன்றோ இக்கார்த்திகைத் தீபத் திருநாள்.

ஐவகைப் பயங்களையும் அழிக்க வல்லான் இறைஒன்றே! 'பயத்திலும் ஐந்து வகையா?' என வியப்புற வேண்டாம். நம் முன்னோர்கள் ஏற்படுத்தியவை அல்லது முறைப்படுத்தியவை யாவும் என்றும் நலம் பயப்பவையே!

ஐவகைப் பயங்கள் யாதென்று காண்போம்: 1. அரச பயம், 2. அரசு அதிகாரிகளால் ஏற்படும் பயம், 3. பகைவரால் ஏற்படும் பயம், 4. கள்வரால் ஏற்படும் பயம், 5. விலங்குகளால் ஏற்படும் பயம். இவற்றைப் போக்கத் துணையாக இருக்கும் வல்லான் இறைவன் தானே!

தீபத்தின் அடிப்பாகம் தாமரையாகவும், தண்டுப் பாகம் திருமாலாகவும், ஜோதி வடிவாக லெட்சுமி இருந்து ஐந்து முகங்களிலும் ஐம்படைகளான சங்கு, சக்கரம், கதை, வில், வாள் கொண்டு நமக்கு வரவிருக்கும் துன்பங்களை அழித்து, நம்மைக் காக்கவென்றே ஸ்ரீலெட்சுமி நாராயணன் தீப ஜோதியாக விளங்கி வருவதாகக கூறுவர்.

சிவபெருமான் தீபமாகவும், ஜோதியாகவும் அர்த்தநாரியாக விளங்கி ஜீவ சக்தியைத் தருபவர். பஞ்ச சக்தியான ஆதிசக்தி, பராசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி களாக விளங்குவன ஐந்து முகங்கள்.

பஞ்ச முகங்களோ ஈசானம, தற்புருடம், அகோரம், வாம தேவம், சத்யோசாதம் எனப்படும். இவ்வாறு பஞ்ச முகத்திலே ஐந்தெழுத்து நாயகனை சிவபெருமான் 'ந-ம-சி-வா-ய' என்னும் பஞ்சாட்சர தத்துவத்தை விளக்குகிறார் என்பதையும் தெளிவாக்கும். பஞ்சமூர்த்தி என்னும் பஞ்சாட்சர தத்துவத்தை விளக்குவதாகும். அம்மட்டின்றி சிவபெருமான் பஞ்சமூர்த்தியாய் விளங்குகிறார் என்பதையும் தெளிவாக்கும். பஞ்சமூர்த்தி என்னும் நாமங்களோ பரமசிவன், அனாஹத சிவன், சதாசிவன், மகேசன், ருத்திரன் எனப் படும். இவ்வாறு அர்த்தநாரியான இறைவனை ஆணும் பெண்ணும் இணைந்து ஜோதி வடிவில் தொழுது இல்லற வாழ்வை ஒளிமிக்கதாக ஆக்க வேண்டும் என்பது தானே தீப வழிபாட்டின் குறிக்கோள்.

ஜோதி ஒளிதரவல்லது. சுட்டெரிக்கும் தன்மையது. ஆம்! நம் உள்ளத்தில் ஒளியைப் பிரகாசிக்கச் செய்ய வேண்டுமானால் பஞ்சமா பாதகங்கள் எனப்படும் 1. காமம், 2. கொலை, 3. களவு, 4. மது அருந்தல், 5. பொய் பேசுதல் என்ற ஐந்தையும் சுட்டெரிக்க வேண்டியது அவசியமன்றோ? அப்போதுதானே ஒளியில் தோன்றும் ஐவகை வண்ணங்களும் நம் உள்ளத்தமைந்து வாழ்வு வண்ணமுற வழிகாட்டும்.

தீபச் சுடரினை உற்று நோக்கினால் ஐவகை வண்ணங்காணலாம். அவை யாவன: 1. வெண்மை, 2. கருமை, 3. செம்மை, 4. பசுமை, 5. பொன்மை என்பனவாகும். அறியாமை என்னும் கருமை யகற்றி வெண்மையாம் தூய்மை பெறச் செய்து, செம்மை சேர் மனத்திலே பசுமை பரவச் செய்து பொன்னான வாழ்வுக்கு வழி காட்டும்.

பஞ்சகந்தம் எனப்படும் உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, அறிவு இவைகளின் வாயிலாக வழிபடுதலே பூரண ஞானமதைப் பொலிவுறச் செயயும. ஞானம் பொலிவிற ஐவகை சுததிகள அவசியமென்பார் ஆன்றோர். அதாவது ஸ்தான சுத்தி எனனும் இருக்கும் இடத்தின் தூய்மை, ஆன்ம சுத்தி என்ற உள்ளத்தூய்மை, திரவிய சுத்தி என்னும் பொருள்களின் தூய்மை, மந்திர சுத்தம் என்னும் சொல்லின் தூய்மை, லிங்க

(28-ம் பக்கம் பார்க்க)

# சித்திரத் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. * சித்திரம் : சசி.

## 21. தோற்றமாய் நின்ற சுடரே !

''திருவே! செல்வமே! கண்ணனே! வான் பொய்ப்பினும், தான் பொய்க்காத பசுக்களிடமிருந்து—கறந்த பாலை ஏற்றுக்கொண்ட பாத்திரங்களெல்லாம்... நிறைந்து .. பொங்கித் ததும்பி நுரையுடன் மேலே வழியும் படியாக—இடைவிடாமல் அமுதமன்னத் தீம்பாலைச் சொரியும் வள்ளன்மைக் குணம் பெற்ற பசுக்களைத் தன்னகத்தே மிகுதியாக உடைய, ஆற்றல் பெற்ற நந்தகோபரது திருவளர்ச் செல்வமே! தேனே! திரவியமே! திருக்குமாரனே! என் கண்ணன்ன கண்ணே! கண்ணின் கருமணியே! கண் விழித்து எழுந்தருள்க!

அடியார்களை—யார் தன்மேல்—அன்பு—பற்று—பாசம்—பக்தி—நேசம் கொண்டவர்களோ அவர்களை—காப்பாற்றுவதில், அவர்கள் துன்பங்களைப் போக்குவதில்—கண்ணும் கருத்துமாகக் கவினுறு சிரத்தையுமாக உடையவனே!

தருமத்தை நிலைநிறுத்தும் வேதங்களின்—மூழு முதற் பொருளாய்த் திகழ்பவனே! அந்த வேதங்களாலும் உபநிஷத்துக்களாலும் அறிய முடியாத அரிய பெரிய கருணை பெற்றவனே! தென்றல் தவழ் ஆழிசூழ் இவ்வுலகத்திலே அவதாரம் புரிந்து நின்றமர்ந்த பேரொளியாய்ப் பிரகாசிக்கும் பெருஞ்சுடரே! கண் மலர்ந்து எழுந்தருள்வாய்!

பகைவர்கள் எல்லாம் தங்களுடைய வலிமை ஒழிந்து, உன் வாசலிலே வந்து நின்று வணங்குகின்றனர்.

நாங்களும் அவ்வாறே, உன்னைப் போற்றிப் புகழ்ந்துப் பல்லாண்டு இசைத்துக் கொண்டு வந்துள்ளோம். எனவே, என் கண்ணில் நிறைந்த கண்ணா! கண் விழித்து எழுந்தருள்க!' என்று ஸ்ரீ கோதை, கருணையே உருவான கண்ணனை துயில் எழுப்புகின்றாள்.

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும் பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்!
ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்!
மாற்றார் உனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றாது வந்துன் அடிபணியு மாபோலே,
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.

சென்ற பாசுரத்தில்—நப்பின்னையைத் துயிலுணர்த்தி எழுப்பினாள் கோதை. அதுவும் எப்படி எழுப்பினாள்? அவளுடைய எழிலான அழகினை எடுத்து உரைத்து, போற்றி, எழுப்புகின்றாள். 'பொற்கலசம் போன்று மின்னும் மென்மையான ஸ்தனங்களை பெற்றவளே' என்றும், 'செக்கச் சிவந்த செம்பவளச் செவ்வாயும், நுண்ணிய எழிலார்ந்த இடையையும், உடையவளே' என்றும் போற்றிப் புகழ்ந்து பாராட்டுகின்றாள். இப்படிப் போற்றிப் புகழ்ந்ததும் எந்த மங்கையருக்குத்தான உள்ளம் குளிராது? மனம் இரங்காது? எனவே, மனம் இரங்கிய நப்பின்னை மயிலென அசைந்து, அன்னமென நடந்து, தாழ்ப்பாளைத் திறந்து, குயிலன்னத் தன் தேன்மொழிகளால், 'நாம் அனைவரும் சென்று ஸ்ரீ கண்ணபிரானை வேண்டிக் கொள்வோம் . வாருங்கள்...' என்று கூறினாள். அவ்வாறே உள்ளே சென்று கண்ணனைத் துயிலுணர்த்துகிறார்கள், இப்பாசுரத்திலே.

'உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!' இப்பிரபஞ்சத்தில் என்றென்றும் நிலைத்து நிற்பது—தங்கமென ஒளி வீசி உலக அங்கமெலாம் இருளைப் போக்கும் செங்கதிரவன் ஒன்றே. அக்கதிரவன் போல என்றென்றும் எக்காலத்தும் ஆன்மாக்களின் - ஆசை, பற்று, பாசம் - போன்ற மன இருளை அகற்றி, துன்பம் - துயரம் - கண்ணீர் போன்ற மேகங்கள் திரண்டு வந்து மூடாவண்ணம்—காத்து—பேரானந்த ஞான இன்பத்தினை வாரி வழங்குகின்ற சுடர்க்கு ஒப்புமை கடந்தவனே—என்று புகழ்கின்றாள்.

'துயில் எழாய்' நீ உன் துயிலிலிருந்து எழுந்தால் போதும்; உன் கண்கள் மலர்ந்தால் போதும்; உலக உயிர்களை அன்றாடம் பற்றிப் பேயாட்டம் ஆடிக் கொண்டிருக்கும் எல்லாத் துன்பங்களும் போகும். 'கடைக் கண் பார்வை நல்காய்' என்று குமர குருபர அடிகள் வேண்டுவது போல, 'கண்ணா, நீ எழுந்து வந்து தான் அருள் செய்ய வேண்டும் என்று அர்த்தம் இல்லை. நீ இருக்கின்ற இடத்திலேயே இருந்து கண்களை மட்டும் சிறிது மலர்ந்து நோக்கினாள் போதும்—என்று வேண்டுகிறாள் கோதை.

'யுத்த களத்தில் சீறிப்பாயும் அம்புகளுக்கு தோற்று எதிரிகள் வருவதுபோல, பகவானே உன் குணங்களுக்கு நாங்கள் தோற்று இங்கு வந்தோம்' என்கிறார்கள்.

''முனிவ்ன மூர்த்தி மூவர்ஆகி வேதம் விரித்து உரைத்த
புனிதன் பூவைவண்ணன் அண்ணல் புண்ணியன் விண்ணவர் கோன்
தனியன் சேயன் தான்ஒருவன் ஆகிலும் தன்அடியார்க்கு
இனியன் எந்தை எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.''

என்று ஸ்ரீ சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாளின் எண்ணத்தை அப்படியே பிரதிபலித்துக் காட்டுகிறார் திருமங்கையாழ்வார்.

'ஏற்ற கலங்கள்'—என்பது வேதாகமங்களை உபதேசமாகப் பெறும் சிறந்த சிஷ்யர்களையும், வள்ளல் பெரும் பசுக்கள் என்பது ஒழுக்க அறநெறிகளில் நின்று திகழும் நல்லாசிரியர்களையும் குறிக்கும் என்றும் கூறவும் வேண்டுமோ!

# 22. தாமரைத்திருவின் நாயகனே !

"திருவின் கருவே! அழகிய மிகவும் விசாலமான மிகப் பெரிய கடல்களின் கவினுறு அலைகளால் தாலாட்டப்படும் இப்புவியை ஆண்ட அரும்பெரும் மன்னர்கள் எல்லாம்,—வீரத்தாலும், அறநெறியாலும் செல்வ வளத்தாலும் செருக்குற்று, 'நமக்கு மேற்பட்டவர் எவருமில்லை' என்ற நினைத்து அவர்கள் பெற்ற ஆணவத்தை அடக்கியதால், கண்ணனே, அவர்கள் தன் பிழையுணர்ந்து அடங்கினர்.

அப்படி, எல்லாப் பிழையும் உணர்ந்து அடங்கி வந்தவர்கள், நீ பேரானந்தத் துயிலில் கண் வளரும் உன் கோட்டுக்கால் கட்டிலின் அருகே, செந்தாமரைப் புஷ்பங்களை ஒத்த உன் இரு திருவடிகளுக்குக் கீழே திரள் திரளாக வந்து நிற்கின்றனரே;... உன் வீரத்தாலும் ஈரத்தாலும் ஈர்க்கப் பட்டு!

அவ்வாறே அன்றோ நாங்களும், உன் செவ்விய திருவடிகளின் கீழே வந்து நின்று தொழுகின்றோம். 'கிண்கிணியின் கவின் பெறு திருவாய்' போல் சிறிது சிறிதாக மலர்ந்த செந்தாமரைப் புஷ்பம் போல சிவந்த கண்கள் காதலாகிக் கசிந்து கசிந்து கனிந்த சிவந்து சிறிது சிறிதாக எங்கள் மேல் விழிக்கலாகாதோ? குளிர்ச்சியையும் இன்பத்தையும் உறவையும் தரும் சந்திரனும், உயிரையும், நலமும் வளமும் அள்ளித் தரும் சூரியனும் ஒருசேர தோன்றியது போல—உன்னிருகவின்பெரு திருவிழிகளால் கண்ணுற்று—எங்களிடமுள்ள பாவங்கள் அழியும் வண்ணம எங்களை கடைக்கண் விழிகளால் நோக்கி கடாட்சிப்பாயாக' என்று பணிந்து கனிந்து வேண்டி எழுப்புகிறாள் ஸ்ரீகோதை.

'அங்கண்மா ஞாலத் தரசர், அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல், வந்து தலைப் பெய்தோம்!
கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே,
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்,
அங்கண் இரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதி!
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்!'

அரசர்கள், கண்ணனுடைய 'வலிமை'யால்தோற்றனர். ஆரணங்குகளோ கண்ணனின் கனிவுக் கருணையால் தோற்றனர்!

'திங்களும ஆதித்தியனும் எழுந்தாற் போல' என்பதை நோக்குவோம். திங்கள் எழுவதிலும் ஆதித்தன் எழுவதிலும் கால வித்தியாசம் உள்ளது. திங்கள் தோன்றுவது இரவில், ஆதித்தன் தோன்றுவது பகலில். அஃது அவ்வாறிருக்க, இருகண்களும் ஏககாலத்தில் 'திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்' எங்ஙனம் மலரும்? காலத்தால் மாறுபட்டு

எழக்கூடிய வெண்மதி, செங்கதிரோனை எங்ஙனம் ஒப்புமைப் படுத்தினாள், அனைத்தும் அறிந்த கோதை? சற்றுச் சிந்திப்போமாக.

உயிர் உடல் பொருள் அனைத்தும் 'ஸ்ரீ ஹரி'யே என்று தியானித்துக் கொண்டிருந்த பிரகாலாதனுக்காக, எக்காலத்தும் எப்பிரபஞ்சத்திலும் என்றுமே இராத புதிய ஓர் உருவத்தைத் தாங்கினார் எம்பெருமான். அடியவர்கள் உய்யும் பொருட்டுத் தம்மிரு நயனங்களில் சூரிய சந்திரர்களை தாங்கினர். 'இறைவரோ தொண்டருள்ளத்து ஒடுக்கம்... தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே...' என்று ஔவையார் தொண்டர்களின் பெருமையை, ஞான பண்டித சுவாமியான முருகனிடமே எடுத்துக் கூறுகிறார். எனவே உலகத்தின் அனைத்து உயிர்களும் உய்யும் பொருட்டுச் சூரிய சந்திரர்களை தன் நயனத்திடத்தே கொண்டதால் ஏககாலத்தில் உதயம் செய்வதில் வியப்பில்லை அன்றோ!

தர்மத்தில் நின்று பகவானையே கதியெனத் திகழ்வோருக்கு வெண்ணிலவு போல் குளிர்ந்த கருணையைப் பொழிகிறான். தர்மத்தில் பிறழ்ந்து பிறர்க்கு இன்னா செய்பவர்களைச் சுட்டெரிக்கும் செஞ்சுடராய் சுட்டெரித்து விடுகிறான். எனினும் கண்ணனின் கருணைக்கு - அருளுக்குக் குளிர்ந்த வெண்ணிலவும் ஒப்பல்ல; கண்ணனின் கடுஞ்சீற்றத்திற்கு அனல் பறக்கும் ஆதவனும் ஒப்பல்ல என்பர் ஆன்றோர்.

கிங்கிணி என்பது... வாய்ப்பக்கம் கொஞ்சம் திறந்த அழகிய சதங்கை. அச்சதங்கையும் பாதி மலர்ந்த செந்தாமரை புஷ்பமும் போன்ற பாதி மலர்ந்த நயனங்கள், அன்பர்களின் குற்றங்குறைகளைப் போக்கும். ஏன் பாதி நயனம் மலர்ந்தால் போதும்? 'முழு நோக்கு பூர்ண கடாட்சம்' என்னும் உச்சி வானில் நிறைந்துள்ள சூரியனை வெறும் கண்ணால் காண முடியாது நேருக்கு நேர் கண்ணுற்று. ஆனால் அதே சூரியனைப் புலர்ந்தும் புலராமல் இருக்கின்ற உதய காலங்களில் நேருக்கு நேர் கண்ணுற்றுப் பேரின்பம் பெறுவதே ஒப்ப, முழு நோக்கினைத் தாங்க இயலாது; அப்படியே கூசச் செய்துவிடும். கடைக்கண பார்வை என்றால் அது இன்பத்தையும் ஆனந்தத்தையும் கருணையையும் நல்கும் என்று கூறவும் வேண்டுமோ?

அத்தா அரியே என்று உன்னை அழைக்கப்
பித்தா என்று பேசுகின்றார் பிறர் என்னை
முத்தே மணி மாணிக்கமே முளைக்கின்ற
வித்தே உன்னை எங்ஙனம்நான் விடுகேனே.

என்று திருமங்கையாழ்வாரும் ஸ்ரீகோதையாளின் கருத்தைக் கூறுவது போல கூறிப் போற்றுகிறார்.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

சுத்தரி என்ற உடலின் தூய்மை அமைந்தே வழிபட வேண்டுமென் பார்.

ஜோதி வடிவாக, பஞ்சபூத தத்துவ மான இறைவன் ஐந்தொழில் புரிந்து அகிலமெல்லாம் காத்தருள் புரிகின்ற தன்மையை விளக்குவதே இவ்விளக் கின் தத்துவம் என்பதில் தவறேது?

அவை, ஒவ்வொரு முகமும் ஒவ் வொரு முகமாக உணர்த்தப்படுவதை யும் ஆன்றோர் விளக்குவர். இறை வனின் ஐவகைத் தொழில்கள் 1. படைத்தல், 2. காத்தல், 3. அழித் தல், 4. மறைத்தல், 5. அருளல் ஆகியவையாகும்.

இறையருளைப் பெற பக்தியுடன் சக்தியும் தேவை. எனவே சக்தி வடி வான பெண்களைத் தீப வழிபாட்டின் கர்த்தாக்களாக்கி, தீப ஒளியின் பிர காசம் போல, இல்லத்தில் இல்லறம் நல்லறமாக ஒளிர்ந்திடச் செய்ய பெண்களே முழுத் தகுதி பெற்றவர் கள் என முறைப்படுத்தி, பெணகள் மூலமே தீப ஒளி திருவின் ஒளியாக விளங்கச் செய்த நன்னாளே இக்கார்த் திகை தீபத் திருநாள்.

இல்லம் முழுதும் தூய்மைப் படுத்தி, மாக்கோலமிட்டுப் பக்தி சிரத் தையுடன் தயாரிக்கப்பட்ட அப்பம், பொரி, வடை, பால்பாயாசம், கனி வகைகளை நிவேதனப் பொருள் களாக்கி, ஐவகை மலர்களாம் விரை செறி மலர்களை—தாமரை, முல்லை, அசோகு, கருங்குவளை, மனோரஞ்சிதம் ஆகியவற்றால் பூஜை செய்து பயன் பெறுகின்றனர். இறைவனுக்குப் படைக்கப்படும் நிவேதனப் பொருள் களிலே ஐவகை மணப்பொருள்களான 1. லவங்கம், 2. ஏலம், 3. கற்பூரம், (பச்சைக் கற்பூரம்) 4. ஜாதிக்காய், 5. தக்கோலம் ஆகியவற்றைக் கலந்து இறைவனுக்காககிய பின் பிர சாதத்தை உற்றார் உறவினர் யாவ ருக்கும் ஈந்துவக்கும்தன்மை பெரு கின்றனர்.

தீபாவளியோ அதிகாலைப் போதில் கொண்டாடப் பெறும் விழா. அதி காலை கங்கா ஸநானம் எனில் முந் தைய நாள் மாலையில் இருதீபமேற் றித் தீபாவளியன்று அதிகாலை நான்கு தீபமேற்றி, அன்று மாலையில் ஆறு தீபமேற்றி மறுநாள் எட்டு, அதற் கடுத்த நாள் பத்து என்று இரண் டிரண்டாக அதிகரித்துக் கொண்டே வந்து, திருக்கார்த்திகை நாளான பௌர்ணமியில் நிறைவுறச் செய்வ தோடு, கார்த்திகை மாத முழுதுமே இல்லத்தில் தீப ஒளி ஒளிர்ந்திடச் செய்வது மரபாகும்

தீபாவளி தொட்டு திருக்கார்த் திகை வரை பெண்கள் நடத்தும் மகத்தான வேள்வியாகும் இத்தீப வழிபாடு. தவிர ஒவ்வொரு பௌர் ணமியும் தீப வழிபாடு நடத்தி, பக்தி சிரத்தையுடன் பூஜிக்கும் பெண்கள் சகல சௌபாக்யங்களும் பெற்றுள் ளார்கள்.

திருமணமாகி பல்லாண்டுகள் மக் கட்பேறின்றி இருந்தோர் பௌர் ணமி விரதமிருந்து, தீப வழிபாடு நடத்தி, நிவேதனப் பிரசாதமான பால்பாயாசத்தைப் பாலர்கட்கு விநி யோகித்து எஞ்சியதைத் தாமுண்டு மனநிறைவோடு இறையைப் போற் றிப் பணிய புத்திரப் பேறு பெற் றுள்ளனர்.

பிணக்கேற்பட்டுப் பிரிநத தம்பதி யினர், பௌர்ணமி விரதத்தின் பலனாக இனிதே கூடி இல் லறம் நல்லறமாக விளங்கச் செய்துள ளனர்.

இவைகளை ஆய்ந்தறியும் போது, நம்முன்னோர் பௌர்ணமி தோறும் தெய்வத் திருவிழாக்கள் ஏறபடுத்தி சக்தியுடன் வாழ்வை பரிணமிக்கச் செய்துள்ளனர் என்பதேயாகும். அர சர்களும் ஆதரவளித்து, நற்காரியங் களுக்குப் பேருதவி புரிந்து உலகம் உய்ய உறுதுணையாய் இருந்ததையும் அறிய முடிகிறது—அவர்கள் எடுத்த விழாக்களும் பௌர்ணமியில் என் பதால்.

தீப வடிவே இறைவன். ஜோதியோ ஒளியோடு கூடி நம் வாழ்வுக்கு வழி காட்டுவது. ஐந்தொழிலின் ஆதா ரம். சகல பாபங்களையும் ஜோதிச் சுடரே போக்கவல்லது. அதிகாலை யும், அந்தி மயங்கும் வேளையும் தீப ஒளி ஏற்றி வழிபடல், தித்திக்கும் தேனமுதாய்த் திகழ வைக்கும் வாழ்க்கையினை. இதையறிந்து, உணர்த்து முகமாகத்தானே, 'அருட் பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' என வடலூர் வள்ளலார் பெருமான் தீபவழிபாட்டை முறைப்படுத்தினார். ஐயப்பன் ஜோதியாகத் தானே காட்சி தருகின்றார்.

இவையனைத்தையும் ஆராய்ந்தால் தெளிவாகும் உண்மை ஒன்றே! சிவ னின் அம்சம் முருகன் என்பதோடு, ஹரியும் ஹரனும் ஒன்றே—இதை உணர்த்துவதே ஹரிஹர புத்ரனான சாஸ்தாவாகும். ஆக எல்லாச் சமய மும் பரம்பொருளான ஜோதியே!

ஜோதியின் தன்மை சக்தி. சக்தி யைப் பெற சக்தி வடிவான பெண்ணே தலை சிறந்தவள். ஆணும் பெண்ணும் ஒருமித்து வாழ்ந்து ஒளி மயமான வாழ்வைக் கொள்ளல் வேண்டும். இறைவன் ஒன்றே — இறை ஒளி யாக—தீப ஒளியில் நமக்கு அருள் பாலிக்கின்றான்.

உலக முழுவதும் ஒரே முறையில், மக்கள் யாவரும் நலமுடன் வாழ வேண்டும் என்பதே உயா குறிக் கோளாக்கி, ஒருமைப்பாட்டை வலி யுறுத்திப் பெண்ணுரிமைப் பேணிக் காத்து, பெண்மையின் சிறப்பால் நனமைகள் நிலவச செய்ய அமைக் கப்பட்டதே இக்கார்த்திகை தீப வழிபாடு.



# திருக்கார்த்திகை தீபவிழா



திருவண்ணாமலைக் கோயில் கோபுரங்கள்; திரு. ஜி. வி. ரமணராவ்.

நம் தமிழ்நாட்டில் பண்டைக் காலந்தொட்டு 'கார்த்திகை தீப விழா' நடந்து வந்திருப்பதற்குப் பல இலக்கியச் சான்றுகள் உள்ளன. தொல்காப்பியத்தில் 'வேலினோக்கிய விளக்கு நிலையும்' என்பதற்கு 'இது கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் ஏற்றிய விளக்கு' என்று நச்சினார்க்கினியர் உரை கூறியிருக்கின்றனர்.

தவிர, சமண நூலான ஜீவக சிந்தாமணியில் 'கார்த்திகை விளக்கிட்டன்ன' என்ற கூற்று வருகிறது. 'நல மிகு கார்த்திகை நாட்டவரிட்ட தலை நாள் விளக்கு' என்று கார் நாற்பதிலும், 'கார்த்திகைச் சாற்றிற்கழி விளக்கு' என்று களவழி நாற்பதிலும் வருவது நோக்கத் தக்கது.

மேலும், சம்பந்தப் பெருமான 'தையலார் கொண்டாடும் விளக்கிடு காணாதே போதியோ பூம்பாவாய்' என்றும், அப்பர் அடிகள் 'தேச விளக்கெலாம் ஆனாய நீயே' என்றும் கூறியிருக்கின்றனர். 'மலை விளக்கு', 'குன்றின் மேலிட்ட தீபம்' என வரும் பழமொழிகள் நம் நாட்டில் இவ்விழாவின் பழம் பெருமையை உணர்த்தி நிற்கின்றன.

கார்த்திகை என்ற நட்சத்திரத்தின் பெயரே இம்மாதத்திற்கமைந்திருப்பது தனிச்சிறப்பைத் தருவது.

"இடர்கெடுத் தென்னை யாண்டு கொண்டென்னுள்
இருட்பிழம் பறவெறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கினுள்ளொளி விளங்கும்
தூய் நற்சோதியுட் சோதி
அடல்விடைப்பாகா அம்பலக்கூத்தா
.................. ....................
படரொளி பரப்பிப் பரந்துநின்றுயைத்
தொண்டனேன் பணியுமாபணியே!"

என்று திருமாளிகைத் தேவர் தம் திருவிசைப்பாவில் கூறுகிறார்.

ஆதியும் அந்தமும் இல்லா அமலன் ஒரே அனல் பிழம்பாய் நின்றான். தேவர்கள் அவன் அடிமுடிகளைத் தேடிக் காண அரிதின் முயன்றனர்; சிவ பரஞ்சுடரின் அழற்சோதி வடிவத்தைக் காண முடியாது வருந்தினர்.

பின்னர் அவர்கள் முனைப்பை யொழித்துப் பரமனைப் பணிய, இறைவன் அவர்களுக்கும் தன் திருவுருக் காட்சி நல்கினன். இச் செய்தி ரிக் வேதம், பாஸ்கர சங்கிதை, சரப உபநிடதம் முதலிய வடமொழி நூல்களில் எளிதாகக் கூறப்பட்டிருக்கிறது.

தவிர, வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில், 'ஓரேனந்தனைத் தேட ஒளித்தருளும் இருபாதத் தொருவன்' என்று கூறியிருக்கிறார். மேலும், திருவாசகத்தில் 'எங்கள் பெருமான் பாதமிரண்டும் வினவில் பாதாளமேழினுக்கப்பால் சோதி மணிமுடி சொல்லில் சொல்லிறந்து நின்ற தொன்மை' என்று மணிவாசகர் அருளுகிறார். இன்னும் அவரே,

"..........................தம் பேதமையால்
பரமமியாம்பரமென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனு ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ"

என்று அடிமுடி தேடிய உண்மையைக் கூறுகிறார்.

---

திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன்-தஞ்சை.

---

பஞ்ச பூதங்களில் அக்கினியே சாலச் சிறந்தது. இறைவன் நிலம், நீர், தீ, வளி, வான், சூரியன், சந்திரன், ஆன்மா என்ற அட்ட மூர்த்தங்களாய் விளங்குகிறான். வேதாகம புராணங்கள் இதனாலேயே இறைவனை ருத்ராக்னி, சிவ ஜோதி, பரஞ்சுடர் என்று அழைக்கின்றன.

'எரியலாலுருவமில்லை', 'தழலுருவாம் சங்கரன்', 'பாசுபதா பரஞ்சுடரே' என்று தேவாரத்திலும்,

'சோதியாய்த் தோன்றும் உருவமே' என்று திருவாசகத்திலும், 'சோதியுட் சோதி', 'பட்ரொளி' என்று திரு விசைப்பாவிலும், 'அலகில் சோதி யன்' என்று பெரிய புராணத்திலும், 'சோதிப் பிழம்பதோர் மேனி' எனக் கந்த புராணத்திலும் காண்கிறோம்.

பூதாகினிக்கும், ஞானுக்கினியான சிவ பரஞ்சுடருக்கும் பல இயைபுகள் உள்ளன. 'தீ' தன்னையடைந்தவர் அழுக்கைப் போக்கித் தன் மயமாகும்; இறைவன் ஆன்மாக்களின் ஆணவ இருளைக் கெடுத்துத் தன் மயமாக்கு வன்.

அக்கினி அருவமாகவும் உருவ மாகவும் விளங்குவது போல், அரனும் அருவமாகவும் உருவமாகவும் மிளிர் கின்றான். நெருப்பு ஒன்றைப் பற்றித் தோற்றஞ் செய்வதுபோல் சிவபெரு மான் சிவஞானிகளின் அறிவினிடம் தன் விளக்கத்தைத் தோற்றச் செய் கிறான். அக்கினி யொன்றே பல தீபங் களாக விளங்குவது போல் சிவ மொன்றே பல மூர்த்தங்களாகவும் விளங்கும்.

சிவசோதியை யோக வழியால் காண முடியாத மக்கள் சரியைத் தொண்டுகளால் காண முயல வேண்டு மென்று சிவாகமங்கள் கூறுகின்றன. சரியைத் தொண்டுகளில் ஒன்று திரு விளக்கிடல். சிவஞான சித்தியாரில் 'தீதில் திருவிளக்கிட்டு' என்றும், அப் பர் தேவாரத்தில் 'விளக்கிட்டார் பேறு சொல்லின் மெயந்நெறி ஞான மாகும்' என்றும் கூறப்பட்டிருக் கின்றன.

நமி நந்தியடிகள், கலியநாயனார், கணம்புல்ல நாயனார் என்ற அடியவர் கள் திருவிளக்குத் திருத்தொண்டால் முத்திப்பேறு பெற்றவர்கள். முற் பிறவியில் எலியாக இருந்து சிவால யத் திருவிளக்கைத் தூண்டியக் கார ணத்தால், மறுபிறவியில் மகாபலிச் சக்கரவர்த்தியாக விளங்கினன் என்று புராணங்கள் வலியுறுத்தும்.

## யுகம் யுகமாய் நிற்கும் தல விருட்சம்

வைத்தீஸ்வரன் கோயில் தல விருட்சம் கிரேதாயுகத்தில் கடம்ப வனம் என்றும், திரேதாயுகத்தில் வில்வ வனம் என்றும், துவாபரயுகத் தில் வகுளவனம் (மகிழம்பூ) என்றும், கலியுகத்தில் நிம்பவனம் (வேம்பு) என்றும் பெயர் பெற்று விளங்குவதாகும். முதல் யுகத்தி லுள்ள கடம்பவனமே மற்றைய மூன்று யுகத்திலும் முறையே வில்வம் முதலிய விருட்சங்களாகத் திரிந்தன. இதனடியில் ஆதி வைத்திய நாதர் எழுந்தருளியிருக்கிறார். இதனை வேம்படிமால் என வழங்கு கின்றார்கள்.

ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

இதனை அப்பர் பெருமான்,

"நிறைமறைக் காடுதன்னி
ணீண்டெரி தீபந்தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச்
சுட்டிடக்கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும்
நீண்டவானுலக மெல்லாம்
குறைவறக கொடுப்பர் போலும்
குறுக்கைவீ ரட்டனாரே"

என்று சிறப்பித்துள்ளார்.

மற்றைய கடவுளர்கள் அடிமுடி தேடிக்காண முடியாது தயங்கிய போது இறைவன் 'இலிங்கோற்பவ' மூர்த்தியாய்க் காட்சியளித்து, 'இது போன்றதோர் சோதி ஆண்டுதோறும் கார்த்திகைத் திங்களிலும் காட்டு வோம்' என்று அருள் செய்தான். இதன்படியே கார்த்திகை மாதக் கார்த்திகையன்று திருவண்ணாமலை யில் திருக்கார்த்திகை தீபவிழா கொண்டாடப் பெறுகிறது.

திருவண்ணாமலையிலுள்ள மலை சுமார் 2600 அடி உயரம் உள்ளது. திருக்கார்த்திகையன்று இம்மலை உச்சி யில்தான் தீபம் ஏற்றுவார்கள். இந்தத் தீபத்தைப் போல் மிகப் பெரிய தீபம் இந்தியாவில் வேறெங்கும ஏற்று வதில்லை.

மலைமேல் பெரிய செப்புக் கொப் பறை வைத்து அதில் நெய், கற்பூரம், கோடிவெள்ளைத்துணி இவைகளைப் பெய்து மாலை ஆறு மணிக்கு தீபத் தைத் ஏற்றுவார்கள். ஏராளமாகப் பக்தகோடிகள் கூடி இக்காட்சியைக் கண்டு பேரானந்தம் அடைவர். தீபம் சிலநாட்கள் வரையில் சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தும், பல மைல் கள் தூரத்துக்கு இவ்வொளி நன்கும் தெரியும்.

தென்னாட்டிலுள்ள எல்லா ஆலயங் களிலும் கார்த்திகைத் தீபவிழா நடைபெறும். மலைமேல் உள்ள கோயில்களில் சிறிய அளவில் தீபம் ஏற்றுகின்றனர். மற்றக் கோயில் களில் பனையோலைகளை அல்லது தென்னங்கீற்றுக்களைக் கூண்டுபோல் கட்டி, ஆலயத்தின் முன்னால் எரிய விடுகின்றனர்.

சுமங்கலிகள் எல்லோரும் வீடு களில் வரிசை வரிசையாக விளக்கு களை ஏற்றி வைத்து, அழகு செய்து பக்தியுடன் வழிபடுகின்றனர். இவ் விழா சிவராத்திரி, வைகுண்ட ஏகா தசி, ஸ்கந்தஷஷ்டி முதலியவை போன்று விரதத்தோடு நம்நாடு முழு தும் கொண்டாடப் பெறும் ஒரு பெருவிழாவாகும்.

முத்தி தரவல்ல திரு வண்ணாமலையில் கார்த்திகை தீப விழாக காண வேண்டும்; அப்படி முடியாதவர்கள் தங்கள் ஊர் ஆலயங் களில் 'சொக்கப்பனை' கண்டு, வீட் டில் விளக்கேற்றி வைத்து, விதிப்படி விரதம் இருந்து இறைவன் திரு வருளைப் பெற வேண்டும்.

நான் என்னும் முனைப்பு—ஆண வம் அகன்றால் இறைவன் அருள்புரி வான் என்பதும், அக இருளைப் போக்கி ஞான வொளியை அடைய நாம் முயல வேண்டும் என்பதும், திருக்கார்த்திகை தீபவிழா விளக்கிக் காட்டும் அடிப்படைத் தத்துவங் களாம்.

# பாமாலை பாடியவள்

திருமதி. சரோஜா திருஞானம்
வெண்பாவூர்.

பாதகங்கள் தீர்க்கும் பரமனடிகாட்டும்
வேதமனைத்துக்கும் வித்தாகும்
— கோதை தமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத
மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

பட்டர் பிரான் பாடிய இந்த அழகிய வெண்பா திருப்பாவையின் பெருமையை நன்கு எடுத்தியம்புகிறது. ஆலின் விதை பெரிய மரத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. அது போல சகல வேதங்களின் கருத்துக்களையெல்லாம் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருக்கும் பாவையை உணராத மானிடரைப் பூமி சுமந்து கொண்டிருப்பது புதுமை. இவர்கள் பூமிக்குப் பாரங்களே ஆவர். இத்திருப்பாவை பிறவிப் பிணி போக்கும் மாமருந்தாகும். ஆசாரியர்கள் அனைவரும் இப்பிரபந்தத்தில் ஈடுபட்டுப் பெரும் பயனுற்றார்கள். இத்திருப்பாவையைப் பாடியவர் 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி' என்றழைக்கப்படும் ஆண்டாள் என்பரே ஆவார். வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் பற்றி இவண் இனிக் காண்போம்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடி :

பாவை பாடிய ஆண்டாள் அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாகத் தோன்றியவள். ஆண்டாள் பெயருக்கேற்ப தமக்கு இணையான ஆழ்வாரையும், நம்மையும் இறைவனையும் ஆண்டவள். பெரியாழ்வார் போற்றி வளர்த்த பாவை, சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாளுள். அரங்கன் மேல் அளவிலாக் காதல்கொண்டு அவனையே கணவனாய் வரித்துக் கொண்டாள். அவள் வாழ்ந்த காலமும் மணிவாசகர் காலமும் ஒன்றேயாகும்.

காதல் தன்மை :

இங்குக் கூறப்படும் காதல் உலகில் காணப்படும் காதல் போலன்று. வேதங்களில் போற்றப்படும் பரம பக்தி என்று சொல்லப்படுகின்ற கழி பெருங்காதலேயாகும். துளசி முளைக்கும்போதே நறுமணத்துடன் கூடியே முளைக்கும். அதுபோல் இவள் தோன்றும்போதே பக்தியுடன் கூடியே தோன்றினுள். இறைவன் மேல் கொண்ட தூய அன்பே ஆண்டாள் கொண்ட காதல்.

பாவையின் பிறப்பு :

வேதங்கள் வடமொழியான சமஸ்கிருத மொழியில் அமைந்துள்ளன. அனைவரும் அறிய முடியாதன. ஒரு சிலரே அறிய உணர முடிவன. அது போலல்லாமல் ஆண்டாள் அருளிய இத்திருப்பாவை அழகுத் தமிழில் தமிழோசைக் குன்றுவண்ணம் அமைந்திருப்பது அமர்ந்து கற்பார்க்கு அரிய விருந்தாகும். இடர்ப்பாடின்றி அவ் இனிய தமிழ்ப்பாக்களைப் பாடிப் பரவசமடையலாம். ஏனைய பிரபந்தங்களிலும் இது சிறந்தது. இது பாதகம் தீர்த்துப் பரமனடி காட்டும், வேதமனைத்துக்கும் மூல வித்தாகும்.

வைணவர்கள் ஆண்டாள் பாடிய திருப்பாவையைப் போற்றிப் பரவுகின்றனர். அதேபோல் சைவர்கள் மணிவாசகர் பாடிய திருவெம்பாவையைப் போற்றிப் பரவுகின்றனர். இருவர் தம் குறிக்கோளும் ஒன்றே.

கேரள நாட்டில் பாவை நோன்பை திருவாதிரை விழாவாகக் கொண்டாடுகின்றனர். வடநாட்டில் கார்த்தியாயனி விரதமாகப் பாவை நோன்பைக் கொண்டாடுகின்றனர். புல்லில் பாவை செய்தும் நோன்பிருக்கின்றனர் ஒரு சாரார்.

"ஐந்தின் முதலா ஒன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு
நோற்றலும்"

என்ற பிங்கல நிகண்டு அடிகளில் பாவை நோன்பினை ஐந்து முதல் ஒன்பதாண்டு வரையுள்ள பெண்கள் நோற்றனர் என்ற செய்தியினை அறிந்து கொள்ளலாம்.

மார்கழித் திங்கள் மதி நிறைந்த
நன்னுளால்,
நீராடப் போதுவீர், போதுமினோ நேரிழையீர்!
சீல்மல்கு மாய்பாடிச் செல்வச்
சிறுமியர்கள்!
கூர்வேற் கொடுந்தொழிலன்
நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணீர் யசோதை
இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்
போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ
ரெம்பாவாய்

மாண்புடைத் திங்கள் மார்கழியே :

தேவர்களுக்கு தை முதல் ஆனி முடிய உள்ளது பகல் காலமாகும். அந்தப் பகல் காலத்துக்கு விடியற்காலம் மார்கழித் திங்களாகும். கீதாசாரியன் கூட "மாதங்களில் மார்கழி நானே" என்கின்றான். பயிர்கள் விளைந்து பயன் தரும் காலமாதலால் நாமும் கிருஷ்ணனைப் பெறக் கூடிய காலமென்றுங் கொண்டாடுகிறார்கள் கன்னிப் பெண்கள்.

சிறந்த பொருள் கிடைத்தால் கொண்டாடுகிறோம். அத்தோடு அது கிடைத்த காலத்தையும் கொண்டாடுகிறோம். சக்கரவர்த்தித் திருமகனுக்குத் திருமுடி சூட்டப் பார்த்த மாதம் சித்திரை. அதனைக் கண்டு பாவனமான மாதம், போக்யமான மாதம் என்று சித்திரையின் பெருமையை எண்ணி வான்மீகி கொள்ளையின்பங் கொண்டான். அதுபோல் மார்கழி எங்கட்குச் சிறந்தது என கன்னியர் நோன்பிருக்கின்றனர். உலகம் புகழ கிருஷ்ணன் உதவி

செய்தான். பெண்கள் நோன்பு நோற்றார்கள். நல்மழையால் நாடுயர்ந்தது என்று உலகம் புகழும்படி நீராட வாருங்கள் என்று கன்னிப் பெண்கள் கூறுகின்றனர்.

குத்து விளக்கெரிய கோட்டுக்கால்
கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின்
மேலேறிக்
கொத்தலர் பூங்கழல் நப்பின்னை
கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா!
வாய் திறவாய்
மைதடங் கண்ணினாய்! நீயுன்
மணாளனை
எத்தனை போதும் துயிலெழ
வொட்டாய் காண்!
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ
ரெம்பாவாய்.

கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா!

நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மண்மார்பா! கொங்கையைத் தன்மேல் வைத்துக் கொண்டவனே என்றுங் கொள்ளலாம். சித்திரகூடத்தில் இராமனும் சீதையும் ஒருவர் மடியில் ஒருவர் முடிவைத்து உறங்கினர் என்கிறது இராமாயணம். அதுபோல கொங்கை என்றால் பக்தி. ஆண் பெண் உறவுக்குக் கருவி. அதுபோல் ஜீவாத்மா, பரமாத்மாவாவதற்குக் கருவியாக இருப்பது பக்தி. ஆகையால் கொங்கை என்பது பக்தியைக் குறிக்கும். பரமாத்மா ஒருவனே பேராண் மகன். அவனைக் குறித்துப் பிறவுயிர்கள் பெண்மையுடையவர்கள் போல் பாவனை செய்வது இயல்பே. ஆதலால் இறைவனுக்கும் நமக்குமுள்ள உறவை ஆண், பெண்ணாகக் கூறியது சரியே.

நாங்கள் குறைகளைய வேண்டி உன் வாயிலில் காத்துக் கிடக்கின்றோம். இதை விட உனக்குத் தனியே ஓர் அனுபவம் உண்டா? பிரிவினால் மென்மையான மலர்ப்பள்ளி வெம்மையான பள்ளியாக இருக்கின்றது. நீயோ படுக்கை முதலிய மென்மையான குணங்களை நன்குணர்ந்து உறங்குகின்றாய். மென்மை, குளிர்ச்சி, நறுமணம், அழகமைந்த படுக்கையில் சுகங்காண்கின்றாய்.

பாஞ்ச சன்னியம் :

ருக்குமணிப் பிராட்டித் திருமணத்தின்போது கிருஷ்ணன் உரிய நேரத்தில் வரவில்லையென வருந்தினாள். உயிர்விடத் துணிந்தபோது, 'இதோ வந்துவிட்டேன்' என பாஞ்ச சன்யத்தை முழக்கி உயிர் போகா வண்ணம் செய்து, தடுத்துக்காத்தான் கிருஷ்ணன்.

அத்தகைய புகழ் பெற்ற பாஞ்ச சன்னியம் போன்ற சங்கங்கள் வேண்டும். ஆலந்தளிரினிலே சிறிய பாலகனாயிருந்தாய். உலகமனைத்தையும் உனது திருவயிற்றில் வைத்துக் காப்பாற்றினாய். இத்தகைய உனக்கு முடியாதது உண்டோ என்கிறார்கள் கன்னிப் பெண்கள்.

இறைவா! நீ உடையவன அன்றோ?

உடைமை தவறு செய்தால் சினங் கொள்ளலாமா? கைகால் தவறு செய்கிறபோது அவற்றை நீ கோபிப்பாயோ? அவைபோல் நாங்களும் உன் உடைமையன்றோ? எங்களை இழந்தால் உடையவனாகிய உனக்கன்றோ இழப்பு? (நஷ்டம்). சிறியோர் செய்த பெரும் பிழையெல்லாம் பெரியவராக இருக்கின்றவர்கள் பொறுத்தல் கடனன்றோ? என வேண்டுகின்றனர் கன்னிப் பெண்கள்.

விஷ்ணு :

நாராயணன் பக்தர்களைத் தன் உடல் போலக் காத்து வருகின்றார் என பாரதம் இயம்புகின்றது. நாங்களும் உனக்குச் சரீரம் தானே? எங்களையும் பிரியாது ஆட்கொள்வாய் என வேண்டுகின்றனர்.

வங்கக் கடல் கடந்த மாதவனைக்
கேசவனைத்
....................................
....................................
....................................
சங்கத் தமிழ்மாலை முப்பதும்
தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பா ரீரண்டு
மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத்
திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின்புறுவ
ரெம்பாவாய்

பாவை நோன்பு நோற்று கிருஷ்ணனைப் பெற்றனர் கோபியர். ஆண்டாள் அனுபவித்துப் பாடியருளினார். அதன் பயனையும் உலகுக்கு எடுத்தருளினார்.

இப்பிரபந்தம் கற்றவர்களைக் கண்டால் தனக்குக் கிடைக்காத பெரும் பேறு கிடைத்ததாக எண்ணுவார். கிருஷ்ணர் திருமுகம் அழகாகமிளிரும். இதனைக் கற்றவர் இக பரத்தில் திருவருள் பெற்று இன்புற்று வாழ்வர். பிராட்டியும் தானுமாய் இருந்து அருள் புரிவார். நாள் தோறும் அதிகாலை எழுந்து திருப்பாவை முப்பதும் தப்பாமே பாட வேண்டும். இயலாவிடில் 'சிற்றஞ் சிறு காலே' என்ற பாடலை மட்டுமாவது படித்தல் வேண்டும். இதுவும் இயலவில்லையெனில் பாடுவதைக் கேளுங்கள். நினைத்துப் பாருங்கள். உங்களுள் பரமாத்மா இருப்பதை உணர்வீர்கள். வடநாட்டில் மீரா! தென்னாட்டில் ஆண்டாள்!

வேத வேத்யன் இராமனாக அவதரித்தான். அப்போது வேதம் இராமாயணமாகத் தோன்றியது. பூமாதேவி ஆண்டாளாக அவதரித்தார். அப்போது வேதங்கள் திருப்பாவையாக (தமிழ் மாலை) மலர்ந்தன. இதையெல்லாம் எண்ணிப் பார்க்கின்றபோது தமிழ் மண்ணில் பிறந்த நாம் எத்தனை பாக்கியம் செய்தவர்களாகின்றோம்.

# சூடிக் கொடுத்த சுடர்க் கொடி

"பல்லாண்டு பலலாண்டு பலலாயிரத
தாண்டு
பல கோடி நூருயிரம்
மலலாணட திண்டோள் மணிவண்ணு-
உன
சேவடி செவ்விதிருகாப்பு"

என்று திருப்பல்லாணடு பாடியும், ஸ்ரீ வில்லிபுத்தூர் எம்பெருமான் 'வடபபெருங்கோயிலுடையானு'க்கு அனுதினம் மாலே கட்டி கைங்கரியம் செய்தும் வந்த நம பெரியாழ்வாருக்கு, ஆண்டாள் என்கிற சூடிக் கொடுத்த நாச்சியார், அவருடைய நந்தவனத்தில், திருத்துழாய் செடியின் அடியில் "பூமி பிராட்டியார் தாமேயாய்", ஆடி மாதம், பூரம் நக்ஷத்திரத்தில் அவதரித்தார் என்பது வரலாறு கூறும் செய்தி ஆகும்.

திரு. எஸ். லக்ஷ்மிநரசிம்மன்
விஜயவாடா.

இத்திருக் குழந்தையை ஆழ்வார் நாளொரு பொழுதும் பொழுதொரு வண்ணமுமாக சீராட்டியும்பாராட்டியும், கணணனின் லீலா விநோதங்களைக் கூறியும் மிகவும் சிறப்பாக வளர்த்து வந்தார். இக்குழந்தைக்குச் "சுரும்பார் குழற் கோதை" என திருநாமமிட்டார்.

ஆண்டாள் சிறு வயது முதல் ஆழ்வாரின் "திருமொழி" என்கிற திவ்ய ப்ரபந்தத்தில் மிகவும் ஈடுபட்டு, சதா கணணனின் திருநாமமே, இம்மைக்கும் மறுமைக்கும் ஊன்றுகோல் என எணணம் கொணடாள். மேலும், கண்ணன் மேல் கொண்ட பக்தியானது மையலாக அதாவது காதலாக, நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. காதலில் கட்டுண்ட ஆண்டாள், பெரியாழ்வார் பெருமானுக்குச சாத்துவதறகாகக் கட்டிய மாலையை தான் அணிநது, பெருமானுக்குத் தான் தகுநதவளா என, தன அழகை கணணுடியில் பார்த்து அகமகிழநது, பிறகு மாலேயை களைந்து ஆழ்வார் அறியாவணணம், குடலேயில் வைததுவிடுவாள். இது அறியாத ஆழ்வார் இமமாலைகளைக் கோயிலுக்குக் கொண்டு சென்று, பெருமாளுக்குச் சாற்றி வநதார். இப்படிப் பல நாட்கள் நடந்து வர, ஒரு நாள் இநத நிகழ்ச்சியைக் கண்கூடாகக் கண்டு வருத்தம் அடைந்து, மாலேயைச் பெருமாளுக்குச் சமர்ப்பிக்காமல் இருந்தார்.

அன்று இரவு பெருமாள் ஆழ்வாரின் கனவில் தோன்றி "கோதை சூடிய மாலே மணமுள்ளதாக இருப்பதால் அதையே நான் விரும்புகிறேன், அவள் அணிந்து களைந்த மாலேயை எனக்குச் சாற்றி வர வேண்டும்" என நியமித்து மறைந்தார். இது கேட்ட ஆழ்வார் மிகவும் மகிழ்ந்து எம்பெருமானின் ஆணைப்படி நடந்து வந்தார்.

இதனுல் ஆண்டாள் சூடிக் கொடுத்த நாச்சியார் என அழைக்கப்பட்டார்.

ஆண்டாளுக்குப் பருவம் எய்தும் காலம் வந்தது. ஆழ்வார் ஆணடாளுக்குத் தக்க வரனைப் பார்த்துத் திருமணம் செய்ய எண்ணியபோது "மானிடவர்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" எனக் கூறி கண்ணனை அடைய விஞ்சி நோம்பு நோற்றும், காமன் காலில் விழுந்தும் கெஞ்சி நின்றுள். இவவகையில் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்கிற இரணடு திவ்ய ப்ரபந்தங்களை உலகம் உஜ்ஜிவிக்க அருளினுர்.

இஃது நாயகன், நாயகி பாவங்களையும் உலகை உஜ்ஜிவிக்கும் வேதசாரமும் அடககி இருககிறது என்பது பெரியவர்களை கணட உணமை.

திருப்பாவையில் "உந்தன் பேர் பாடி நாங்கள் நம் பாவைககுச் சாற்று நீராடினுல்" என்ன பயன அடையலாம் என்பதை விளக்குகிருர்.

"ஓஙகியுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாஙகள் நமபாவைக்குச் சாறறு
நீராடினுல்
தீஙகின்றி நாடெலலாம் திங்கள
மும்மாரி பெய்து
ஓஙகு பெரும் செந்நெலூடுகயலுகள
பூங்குவளைபபோதில் பொறி வணடுகண்
படுபப
தேங்காதே புககிருந்து, சீர்த்த முலே
பற்றி-
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல
பெரும் பசுக்கள்
நீங்காதசெலவம் நிறைந்தேலோ
ரமபாவ்"

மேலும் சிறு காலேயில் வந்து பெருமாளைச் சேவித்து வந்தால் என்ன பயன கிடைக்கும் என்பதைக் கீழ்க் கணட பாசுரத்தில் அளித்துள்ளார்.

"சிற்றம் சிறுகாலே வந்து உன்னைச்
சேவிதது உன்
பொற்றுமரையடியே போறறும
பொருள்கேளாய்
பெறறம் மேய்த்துண்ணும் குலததில்
பிறந்து-நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல்
போகாது
இற்றைப்பறை கொள்வானனறு
காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழெழ் பிறவிக்கும்
உன தனேடு
உற்றேமேயாவோம உனக்கே நாம்
ஆட்செய்வோம்
மற்றை நங்காமங்கள் மாறறேலோ
ரெமபாவாய்"

இவ்வாருக, இரவு பகல் கண்ண னின நினைவாகவே இருநது, "கஞக் கண்டேன்" என்கிற நாசசியார் திரு மொழியை அருளிச செய்தார்.

நாசசியார் திருமொழியில், கண ணனை மணம் செய்யக் கணட தூய நறகனவை இவவாறு கூறுகிருள்.

" வாரணமாயிரம் சூழ வலஞ் செய்து
நாரநமபி நடககிருனெனறெதிர்
பூரண பொறகுடம வைத்துப
புறமெஙகும்
தோரணம் நாட்ட கஞக கணடேன
தோழி நான் "

" இமமைக்கு மேழேழ் பிறவிககும்
பற்ருவான்
நம்மையுடையவன நாராயணன்நமபி
செமமையுடைய திருககையாறறுள
பறறி
அம்மி மிதிக்கக் கஞக்கணடேன்
தோழி நான "

இன்றும் நாச்சியார் திருமொழியில் பாடியுள்ள "வாரணமாயிரம்" எனறு ஆரம்பிக்கும் பத்துப் பாசுரங் களும், வைணவர் வீட்டில் நடககும் கலயாணங்களிலும் அநுசந்தானம் செய்து வருவது, தொனறுதொட்டு வரும் ஆசாரம ஆகும்.

இவ்வாறு அனுதினமும், கண்ண னின புகழ் பாடிக் காதல் கொணட கோதைககு, ஆழ்வார் எல்லா திவ்ய தேசதது பெருமாள் களிபெருமை யைக கூற, அது கேட்ட ஆணடாள, "வாயழகு கணணழகு கொப்பூழில் ஏழு கமலப் பூவழகு"கனை உடைய திருவரங்கப்பெருமாள் ஆன அரங்க நாதரை மணப்பேன் என்ருர். இது கேட்ட ஆழவார் 'ஆவ தெங்ஙனே' எனறு கவலைப்பட்டுப் பெருமானைப் பிரார்ததித்தார்.

திருவரங்கத்து அரங்கநாதா ஆழ் வாருக்கு அருளபாலித்து ஆணடாளை திருமணம செய்து கொணடார். மேலும பக்தி என்கிற காதலைக் கொணட கோதையின சிறப்பை வரு ணிக்க மானிடர்களால் இயலாது.

இவ்வாறு பரம்பொருளை அடைய ஹேதுவான பகதி மார்கத்தை, நடைமுறையில் நடத்திக் காட்டிய ஆணடாளை அனுதினம வணஙகி வாழ்த்துவோம். (ஃ)

# கார்த்திகை விரதம்

ஆறுமுகக் கடவுள ஆறு குழந்தைகளாக உருவம் கொண்டு சரவணப் பொய்கையில தாமரை மலாகள் மீது தவழ்ந்து கொணடி ருந்த போது கார்ததிகைப் பெண்கள அக்குழந்தைகளை ஆசையுடன் எடுத்துப் பாசமுடன பாலூட்டி மகிழ்நதனர். அப்போது சிவபெரு மான் உமாதேவியாருடன அஙகுத் தோன்றிஞா.பார்வதியை நோககி 'தேவி! இப்பொய்கையில் விளங்கும் உனது ஆறு குழந்தைகளையும் எடுத்துக்கொள்க என்று பரிவுடன கூறிஞா.

அம்மையாரும் அகம் மகிழ்ந்து அவ்வாறு குழநதைகளையும் ஒன்ருகச் சேர்த்து அணைத்துக்கொணடு சிவபெருமானுககும் தனக்கும் இடையில வீற்றிருககச செய்தார். அப்போது கார்ததிகைப் பெண கள் அறுவரும் சிவபெருமானை வணங்கி நினருர்கள். பெருமான் அவர்கள்மீது கருணைகொணடு"நீங்கள எமது குமாரனுகிய முருகனுக் குப் பாலூட்டி வநதீர்கள். அதுபற்றி உங்கள் புத்திரன எனனும் பொருளபட இவனுக்குக கார்த்திகேயன் என்னும பெயர் வழங்குவ தாக! உங்களுக்குரிய கார்த்திகை நாளில் கநதனைப் போற்றி விர தம் இருநது வழிபடுகின்றவர்கட்கு தீவினைகள் நீஙகப் பெற்று வாழ்க்கை நலன்கள் அனைத்தும் பெற்று வாழ அருள் புரிகிருேம்." எனறு கூறிஞர்.

திரு. ஆர். சுப்பராவ்—திருக்கோவலூர்.

# ஆண்டாள்

சூடிக் கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள்
செந்திரு போன்ருள் செந்தமிழ் ஆணடாள் (சூடிக்)

பாடிக் கொடுத்த பாசுரம் மீதினில
படியும் தேனடை எங்கணும் எங்கணும் (சூடிக்)

தேரோடும் வில்லியில் தேவர்கோன கோவில்முன்
தவழ்நதிட்ட மணியது தமிழதன் அணியது
காாமேனி செங்கணனைக் காலமெலாம் கனவுகணடாள்
கணட கனவதுபோல் கலந்து நிறைவுகொணடாள (சூடிக்)

பெரியாள்வார் இல்லத்தில் பெருமையுடன் வளர்ந்தவள்
பட்டர்கோன பக்தியிலும் பாடலிலும் கிளர்நதவள்
ஒரு ஆழ்வாா பலருள்ளும் என்றநிலை யாகாமல்
இறைவனையே ஆளபவள் எனுந்நிலைக் கேகியவள் (சூடிக்)

செ. ஞானன்—சிவகாசி.

மாதங்களுள் மிகவும் ஸ்ரேஷ்ட மானது தனுர்மாதம். ஸ்ரீகருஷ்ண பகவான் கீதையில "மாஸானும மார்க்க சீரேஷோகம்'' எனறு அருளி யிருக்கிறார். இந்த மார்கழி மாதத் தில்தான் கோபியர்கள நோனபு பூண்டு ஸ்ரீக்ருஷ்ண பகவானை ஆரா தித்தனர். இப்புணணிய மாதத்தில் தான் பகதர்கள விடியற் காலையில் ஸ்நானம் செய்து ஸ்ரீ ஆணடாள் அருளிச் செயத திருப்பாவையை அநுஸந்தானம் செயகிறார்கள்.

அயோநிஜையான ஸீதாப்பிராட் டியைப் போலவே ஆணடாளும பெரி யாழ்வார் திருமகளாய் நநதவனத் தில் தோனறினள. ஆண்டாள் பூதேவி அவதாரம். "ஸாக்ஷாத

பாட்டு) என்று அருளியபடி நாம ஸங்கீர்த்தனமும 'தூமலர் தூவித் தொழுது வாயினால பாடி மனததில் சிநதிகக' (ஐநதாவது பாட்டு) என்று அருளியபடி அாச்சனமும், 'மாற்றார் உனககு வலிதொலைந்துன் வாசற் கண ஆற்றாது வநது உன்னடி பணி யுமாப்போல் போறறியாம் வநதோம்' (21-வது பாட்டு) எனறும் 'அங் கணமா ஞாலததரசர் அபிமான பங்கமாய் வந்துநின் பள்ளிககட்டிற் கீழே சங்கமிருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம' (22-வது பாட்டு) எனறும அருளியபடி ஸரணாகதி தர்ம மும் உணர்த்தப்பட்டுள்ளன.

ஆண்டாளினால அருளிச் செய்த இததிருப்பாவை (30 பாட்டுககள)

இவளுக்குப் பெயர். கோதா என் றால வாக்கை அளிபபவள், சொலலின் செல்வி எனறு பெயர். கோதை எனறால் பூமாலை அளிப்பவள் என்று பெயர் வாககாகிய பாமாலையும், பூமாலையும் சேர்த்து பெருமாளுக்கு ஸமாப்பிககிறாள். இதே போல் வட மொழி வேதாநதத்தையும் தமிழ் மறையையும் தன் அனுபவத்திற்கு விஷயமாக்கினார் தேசிகன.

மஹரிஷிகள் பகவானைத் தேடி அலைந்தார்கள். கணடு ஆனநதம் கொணடாடினார்கள். ஆழ்வார்களோ ஓடி, உகந்து எமபெருமானை அடைந் தனர். ஆனால நம ஆணடாள் பெரு மானைக் கண்ட வழிகளை சொல்ல இயலுமா! அவை அறபுதத்திலும் அற்புதம்.

# ஸ்ரீ ஆண்டாளின் மஹாத்மியம்

க்ஷமாம்'' என்கிறபடி பூமியின அத் தனை அம்சததையும பெற்றாள். திரு மகளாகவும், நிலமகளாகவும் உள்ள இவளே நப்பின்னையின் பெருமையை யும் அடைகிறாள்.

ஆதியில் ஹிரணயாக்ஷன் பூதேவியை தூககிச் சென்று சமுத் திரத்தின் அடியில் மறைத்து வைத்து விட்டான். பக்தாகளின் துயரை நீக்க பகவான வராஹ அவதாரம் எடுத்துப் பூதேவியை ஹிரணயாக்ஷ னிடமிருந்து காப்பாற்றினார். பூதேவி 'பக்தர்கள் பகவானை அடையும வழி யும் அருள வேணடும்' எனறு பக வானைப் ப்ராாததித்தாள். பகவான் இதற்கான சுலபமான நாமசங்கீர்த் தனம், அர்ச்சனம், ஸரணாகதி எனற மூன்று வழிகளை காட்டியருளினார்.

இம்மூன்று உபாயங்களையும் ஸ்ரீ ஆண்டாள நமக்குத் திருப்பாவை மூலம உபதேசித்துள்ளாள்.

'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' (திருப்பாவையின் மூன்றுவது

அநேக வைபவஙகளும், மஹாத்மியங களும் கொணடது.

**ஸ்ரீ ஆண்டாளைப் பற்றி ஸ்ரீ தேசிகன் :**

ஆணடாள் பாமாலை பாடிக் கொடுத்தப் பெருமையையும் பூமாலை சூடிககொடுத்தப் பெருமையையும் வெகு அழகாக நிகமாந்த மஹா தேசிகன் தான இயற்றிய (29 ஸலோ கஙகள கொணடது) ஸ்ரீகோதாஸ்துதி யில் பாராட்டியிருககிறார். கோதை பிராட்டியின் அவதாரம், பால்ய விவாஹம் போனற எல்லா ரஸங் களையும் வெகு அழகாக வாணித் திருககிறார். ஸவாமி தேசிகனே, இறுதி ஸலோகததில பகு குணங்கள் அமை யப் பெறறதால இது 'பஹுரமணீய மாக' உளளது எனகிறார்.

கோதா எனறு வடமொழியிலும் கோதை என்று தெனமொழியிலும்

ஆணடாளுடைய ஸகல கார்யங் களிலும் அநுகரகமே முக்கிய மென பதை 'ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவான்யாம்' என்று கோதா ஸ்துதியின் முதல் ஸ்லோகத்தில கூறு கிறார் தேசிகன.

பூமாலையால திருவரங்கனுடைய திருமேனியைக் கட்டி, பாமாலையால் அவன் திருவுள்ளத்தை வசப்படுத்தி விட்டாள். இதை வெகு அழகாக தேசிகன 5வது ஸ்லோகத்தில வர்ணித் திருக்கிறார்.

"அஸமாத்ருசா மபக்ருதௌ சிரதீக்ஷி
தாநாம்
அஹ்நாய தேவி தயதே யதசௌ
முகுந்த: |
தநநிஸ்சிதம் நியமிதஸ தவ மௌளி
தாமநா
தந்த்ரீ நிநாத மதுரைஸ ச கிராம்
நிகுமபை: ||

ஸ்ரீராமாநுஜரே கோதையையும் அவளுடைய ப்ரபநதத்தையும் போற்றியுளளார், பராஸர பட்டரோ

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்,
டால்மியாபுரம்.

கோதைக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துள்ளார். வேதாந்த தேசிகரோ கோதா தேவியைப் பற்றி ஒரு வெகு அற்புதமான 'கோதாஸ்துதி'யை இயற்றியுள்ளார்.

ஸ்ரீமத் ராமாயணத்திற்கு ஒப்பாக திருப்பாவையின அமுதம் மேன் மேலும் வளர்ந்து வருவதில் என்ன ஆச்சர்யம் என்று கேட்கிறார் தேசிகன். 7வது ஸ்லோகத்தில் கூறுவதாவது:

வல்மீகத: ச்ரணவதோ வஸுதாத்ம
நஸ் தே
ஜாதோ பபூவ ஸமுநி: கவி ஸார்வ
பௌம: |
கோதே கிமத்புதமிதம் யதமீ ஸ்வ
தந்தே
வக்த்ரார விந்த மகரந்த நிபா:
பிரபந்தா: ||

இராமாயணத்தைக் காட்டிலும் கோதையின் திருமொழிகள் மிகவும் போக்யமானவை.

தென் திசையே இவளுடைய அவதாரத்தினால் உத்தரமாகி விட்டது. திருவரங்கப்பன் நோக்கும் திக்கு தெற்கு. ஆண்டாள் ஸ்ரீவில்லிப் புத்தூரில் அவதரித்த அந்தத் திக்கில் கடாக்ஷங்கள் ப்ரஸரித்தன. உத்தரத்திற்கு 'உயர்ந்தது' எனறும் 'வடக்கு' என்று இரண்டு பொருள் உண்டு. தெற்காக இருந்த போதிலும் வடக்காக விளங்குகிறது.

'தென் திசையில் இலங்கை நோக்கி' என்று தொண்டரடிப் பொடி ஆழ்வார் அநுஸந்தித்ததை ஸ்ரீதேசிகன் 'தென் திசையில் நங்கையை நோக்கி' என்று வெகு அழகாகக் கூறுகிறார்.

திக் தக்ஷிணாபி பரிபகத்ரிம புண்ய
லப்யாத்
ஸர்வோத்தரா பவதி தேவி தவா
வதாராத் |
யத்ரைவ ரங்கபதிநா பஹுமாந பூர்வம்
நிதராளுநாபி நியதம் நிஹிதா:
கடாக்ஷா: ||

ஆண்டாளின அவதாரத்தினால தமிழ் நாடே ஸர்வோத்தம் ஆகிவிட்டது. தாயார் தோன்றிய தென் திசையை நோக்கியே எம்பெருமானும் உறங்குகிறான்.

இந்த கோதா ஸ்துதியை அப்யஸிக்கிறவர்கள் ஸ்ரீரங்கநாதனுடைய பஹுமானத்திற்கு பாத்திரமாகிறார்கள் என்று தேசிகனே கூறியிருக்கிறார்.

நாமும் இம்மார்கழி மாதம் முழுவதும் விடியற்காலையில் ஸ்நானம் செய்து ஆண்டாளின் திருப்பாவையையும், ஸ்ரீதேசிகனின் கோதா ஸ்துதியையும் அநுஸந்தித்து இகபர சுகமடைவோம்.

★

# கருத்து மாறிய கருவூலங்கள்

**அழுத பிள்ளைதான் பால் குடிக்கும்**

இப்பழமொழி காலப் போக்கில் கருத்துமாறி வழங்கப்பட்டு வருகிறது. திருஞானசம்பந்தர் சீர்காழிப் பதியின் குளக்கரையில் நின்றழுத போது, உமையம்மை சிவனருட் செல்வமான ஞானப்பாலைப் பொற் கிண்ணத்தில் பெய்து கொடுத்தாள். அதை உண்ட சம்பந்தர் "தோடுடைய செவியன்" எனப் பதிகம் பாடினார்.

எவனொருவன் உள்ளன போடு வெள்ளை மனத்தோடு இறைவனை நாடி, கண்ணீர் சிந்தி, வேண்டுகின்றானோ, அவனுக்கு இறைவன் அருள் பாலிப்பான். இதையே "வாய் உள்ள பிள்ளைதான் பிழைக்கும்" என்பர். "அழுத பிள்ளைதான் பால் குடிக்கும்" என்றும் கூறுவர்.

சமுதாய ரீதியிலும், அழுகின்ற ஒரு குழந்தைக்குத்தான் தாய்ஒருத்தி பாலமுதுஊட்டிப்,பசியமர்த்துவாளே தவிர, தாயை மறந்து தன்னந் தனியாக விளையாடும் குழந்தையை எடுத்துப் பாலூட்டமாட்டாள்.

இதனால்தான் உண்மைப் பக்தியின் உரைகல்லாகக் ,கண்ணீரைச் சொல்வார்கள். "அழுதால் அவனைப் பெறலாமே" என்பது மணி வாசகர் கருத்தும் கூட.

**வக்கற்றவனுக்கு வாத்தியார் வேலை,**
**போக்கற்றவனுக்குப் போலீஸ் வேலை.**

வாக்குக் கற்றவனுக்கு வாத்தியார் வேலை என்பதே இந்த நிலைக்குத் திரிந்து கிடக்கிறது. தான் கற்ற செல்வத்தை, எளிமையாக, இனிமையாக புரிகின்ற அளவில் சொல்வதற்கான வாக்குத் திறன் பெற்றவன் ஆசிரியர்த் தொழிலுக்கு ஏற்றவன் என்ற கருத்தை முதல் வரி ஏந்தி நிற்கிறது.

போக்குக் கற்றவனுக்குப் போலீஸ் வேலையைக் கொடு என்பதே மேற் கண்டவாறு திரிந்து வழங்கப்பட்டு வருகிறது. குற்றவாளிகளின் போக்கினை அதாவது அவர்களது நடவடிக்கைகளைத் தெரிந்து கொண்டு, அதன படி செயல்படும் திறன் பெற்றவனுக்குக் காவல் துறையில் இடம் கொடு என்ற அாத்தத்தில் வழங்கி வந்த பழமொழியே இன்று மாறி வழங்கப்படுகிறது.

**கைப்புண்ணுககுக கண்ணாடி தேவையா?**

இந்தப் பழமொழியும் சிதைநது பொருள்மாறி வழங்கப்பட்டு வருகிறது. "கைப்புண்" என்பதல்ல. "கைப்பூண்" என்று இருக்கவேண்டும.

"பூண்" எனறால் தஙகத்தால் செய்யப்பட்ட காப்பு. கையில் பூட்டப்பட்டுள்ள அணியின் அழகைக் கண்டு ரசிப்பதற்கு கண்ணாடி தேவையில்லை என்பதையே இப்பழமொழி தாங்கி நிற்கிறது.

**எநதப் புலுகும் கந்த புராணததிலே**

அன்பு, காதல், அருள், வீரம், தந்திரம் போன்ற எண்ணற்ற பொருளுடைய—அர்த்தம் உடைய செய்திகள கந்தபுராணத்திலே நிறைய உண்டு என்பதையே எந்தப் பொருளும் கந்த புராணத்திலே என்ற பழமொழி ஏந்தி நிற்கிறது. இநதப் பழமொழியே பேசசு வழக்கில திரிந்து 'எந்தப் புளுகும் கந்த புராணத்திலே' என்று மாறி விட்டது.

**எள் எண்ணெய்க்குக காய்கிறது.**
**எலிப் பிழுக்கை ஏன் காய்கிறது?**

எள்ளில் இருந்து எண்ணெய் எடுப்பதற்கு முன்னதாக அதை நன்றாக வெய்யில் காய வைத்து உலர்த்துவர். இதைத்தான் எள் எண்ணெய்க்காகக் காய்கிறது. ஆனால் எலிப் பிழுக்கை ஏன் காய்கிறது?என்று ஒரு கேள்வி கேட்கப்படுகிறது.

எலிப் பிழுக்கை சில நோய்களைத் தீர்க்கும் மருந்துப் பொருளாகப் பயன்படுகிறது. அந்த மருந்தைத் தயாரிப்பதற்கு முன்பு எலிப் பிழுக்கையை நன்றாக வெய்யிலில் காய வைப்பார்கள்? ஒன்றுக்குப் பதில் சொல்லி இன்னொன்றுக்குப் பதில் சொல்லாமல், அதை நம்மிடம் இருந்து எதிர் பார்ப்பார்கள். அந்த வகையான கேள்வியைச் சார்ந்தது, இப்பழமொழி.

**சொக்கனுக்குச் சட்டி அளவு**

இப்பழமொழிக்குப் பொருந்தாத விளக்கங்கள் சொல்லப்பட்டு வருகின்றன. ஆனால் "சொககன்" என்றால் சிவபெருமானின் திருநாமங்களில் ஒனறு. சொக்கலிங்கம், சொக்கர் என்றெல்லாம் சைவர்கள் பெயர் வைக்கின்றார்கள். மதுரையில் கொலுவீற்றிருக்கும் பிரானுக்குச் சொக்கன் என்றே பெயரிட்டு அழைக்கும் மரபு இன்றும் இருக்கிறது.


புலவர் வாரியார்க்கன்பன்
**சோ. கு. குருசாமி, பி.லிட்**
இராசபாளையம்.


'சட்டி' அல்ல சக்தி. சக்தி என்பதைத்தான் பேச்சு வழக்கில் திரிநது வழங்குகிறது. சொக்கன் என்றால் தனது அழகால் ஆன்மாக்களைச் சொக்க வைத்து, அதாவது மயங்க வைத்தவன்,அப்படிப் பிறரை மயங்க வைக்கும் அழகு படைத்த சிவபெருமானுக்குப் பொருத்தம் ஆனவள் சக்திதான்.

சொக்கனுக்குச் சக்தி பொருத்தம் ஆனவள் என்பதே சொக்கனுக்குச் சட்டி அளவு என்றாகி விட்டது.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வஙகிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாணமைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக கொள்கின்றோம்.

**சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும**

மேலே கண்ட பழமொழி இந்தச் சமுதாயத்தின் இயலாமையைப பிரதிபலிக்கின்றதென்பது உணமையாக இருந்தாலும், உண்மையான விளக்கம் ஆன்மீகச் சார்புடையது.

'சஷ்டியில் இருந்தால் அகப்பையில் வளரும்' என்பது.

அதாவது குழந்தைப் பேறு இல்லாத தம்பதியர் சஷ்டி விரதம் இருந்தால் அகப்பையான கர்ப்பப் பையில் குழந்தை வளரும் என்பது பொருள். ஐப்பசி மாதம் திருச்செந்தூரில் நடைபெறுகின்ற கந்த சஷ்டித் திருநாளில் எண்ணற்ற தம்பதியர் குழந்தைப் பெறவேணடி விரதம் இருப்பதைக் கண்கூடாகக் காணலாம். காலப் போக்கில் இப்படி மாறி விட்டது.

**சக்தியிருந்தால் செய் இல்லையேல் சிவனே என்றிரு**

உடம்பிலே தெம்பு, சக்தி, தைரியம், துணிச்சல் இவை இருந்தால் ஒரு காரியத்தில் இறங்கு. அதைத் தான் சக்தியிருந்தால் செய் என இனறனர் பெரியோர். அவ்வாறு இல்லை என்றால் சிவனே 'எல்லாம் உன் செயல்'என்று அவனையே நினைத் திரு. அடைக்கலமாகச் சென்றுவிடு.

"சிவாய நம வென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாய மொருநாளும் இல்லை"

என்பது ஔவையின் வாக்கு.

இதைத்தான மேற்கண்ட பழமொழி தாங்கி இருக்கிறது.

**ஆண்டியைக் கண்டால் லிங்கன் தாதனைக் கண்டால் ரங்கனு?**

ஆளுக்கு ஏற்றபடியெல்லாம் வேடம் புனைந்து ஏமாற்றுகின்றவர்களை இப்படிச் சொல்லிக் கிணடல் செய்வதுணடு.

ஆணடி என்றால் சிவபெருமான. சைவ மதச் சார்புடையவர்களைச் சந்திக்கின்றபோது தனது பெயர் லிங்கம் எனறு சொல்லி ஏமாற்றுவதும்,தாதர்கள் என்ற வைணவர்களைக் கணனுற்றபோது தனது பெயர் ரங்கன் எனறு கூறி பொய் சொல்லுவதும் இவர்கள் பிழைப்பு. சுருக்கமாகச் சொன்னால் பச்சோந்திகள் இப்பழமொழிகளில் விமர்சிககப்படுகின்றனர்.

**பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க**

பொதுவாகத் திருமணத் தம்பதியரை வாழ்ததும்போது பதினாறு வகையான செல்வங்களைப் பெற்றுச் சிறப்பாக வாழ்க என்ற பொருளில் வாழ்த்துவர். ஆனால் பதினாறு பிள்ளைகளைப் பெறுதல் என்று தவறாகப் புரிந்து கொண்டனர்.

புகழ், கல்வி, வளமை, சொத்து, வெற்றி, பொன், நெல், விதி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, நீண்ட ஆயுள், நுகர்சசி போன்ற பதினாறு செல்வங்களைப் பெற்று வாழ்க என வாழ்த்துதல் மரபு.

**கொன்றால் பாவம் தின்றால் போச்சு**

இந்தப் பழமொழியின் கருத்து மிகவும் மாற்றி வழங்கப்பட்டு வருகிறது. கொலை செயத பாவத்திற்காக ஒருவன் அன்னதானம செய்ய, அதை ஆயிரக்கணக்கான மக்கள் உண்டு களித்து, அவனை வாழ்த்திடப் பாபம் தொலையும என்ற பொருளில் கொன்றால் பாவம், தினறால் போச்சு என்றிந்தப் பழமொழியை உபயோகப் படுத்துவர்.

**கரணம் தபபினால மரணம்**

மூங்கில் கழியின் மேல் நின்று கூத்தாடும் கலைஞர்கள் சிறிது தவறினால் கூட மரணம் நேரிடும் என்ற பொருள் தான் வழக்கத்தில் இருக்கிறது.

களவு மணம் செய்த இருவர் பின்பு உலகம் அறியத் திருமணம் செய்து கொண்டு வாழ்வது பண்டைக் காலத் தமிழ் மரபு.

களவிலே ஒன்றுபட்டு இன்பந் துய்த்த இரண்டு உள்ளங்கள் திருமணம புரிந்து கொள்ள முடியாத தடை ஏற்பட்டால் தங்கள் உயிரை மாய்த்துக் கொள்வர்.

'கரணம்' என்றால் களவு என்ற பொருளாகும்.

**நீ என்ன பெரிய கொம்பனு?**

எவராலும் செய்ய முடியாத செயலை ஒருவன் செய்தால் அவனைப் பெரிய கொம்பன் எனறு சொல்வதைப பாரக்கிறோம்.

கலைககோட்டு முனிவர் என்று ஒருவர் இருந்தார். அவரது தலையில் மான் கொம்பு போன்று ஒரு கொம்பிருக்கும.

கலை என்றால மான், கோடு என்றால் கொம்பு. ஆகவே கலைக்கோட்டு முனிவனுக்குத்தான் கொம்பன் என்று பெயர். அவர் சென்ற இடமெல்லாம் வளம் பூத்துக் குலுங்கும். மழை பெய்யும். தயரதன் அவரை அழைத்து யாகம் செய்வித்து மக்களைப் பெற்றதாகப் புராணம் கூறுகிறது.

கலைக் கோட்டு முனிவனைப்பற்றி வந்தவைதான் இந்தப் பழமொழி.

**அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவான**

'அடி' என்று சொல்வது அடித்த லாகிய தொழிலைக்குறிப்பது இல்லை. அடி என்றால் மனைவி என்ற பொரு ளும் உண்டு.

ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் அவனுடைய இன்ப துனபங்களில் பங்கெடுத்துக் கொளவதுடன் எந்தத் தியாகத்தையும் செயயத் தயாராக இருப்பவள் மனைவி. மனைவியைப் போல அண்ணன் தம்பி உதவி செய் யான். இதைத்தான் அடி உதவுவது போல அண்ணன் - தம்பி உதவான் என்று வழங்கப்பட்டு வருகிறது.

**நூற்றுக்கு ஐந்துதான் தேறும்**

உலகில் பெரும்பாலானவர்கள் தவறு செய்யும் மனப்பாங்குடைய வர்களாக இருககினறனர். நலலவர் களை எணணி விடலாம் எனறு கருத தில் அடிப்படையில் எழுந்ததே இந் தப் பழமொழி.

கௌரவர்கள நூறு பேரும் கெட் டவர்களாக இருந்தாலும, பாணட வர்கள் 5 பேரும் நல்லவர்களாக விளங்கினாகள். இதைத்தான் "நூற் றுக்கு ஐந்தாவது தேருதா?" என்று சொல்வர்.

**சுத்த ரெண்டுங் கெட்டானு இருக்கானே!**

ஒரு மனிதனை ஆட்டிப் படைக் கினற சக்திகள் இரணடு. 1. அறிவு. 2. உணர்ச்சி. இரண்டும் இல்லாமல் போனால் அவனால வாழ முடியாது என்பர்.

இதைவிடச் சிறநத பொருள், ஒரு மனிதன் எவ்வளவுதான் சிறநத வனாக இருந்தாலும் இரண்டு புத்திக் குள் அடங்கித்தான் இருப்பான். 1. சொல்புத்தி, 2. சுயபுத்தி. இநத இரண்டும் இல்லாதவன் இரணடும் கெட்டான் என்று சொல்வர்.

☆

# தெரிந்து கொள்ளுங்கள் !

"ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என் அம்மை......"

என்று கல்விக்கு அதிதேவதையான கலைமகளை போற்றிப் புகழ்ந்து பாடி ஏற்றித் தொழுகிறோமே அந்த அறுபத்துநான்கு கலைகளும் எவை எனத் தெரியுமா? அவை இவைதான் :

1. அக்ஷரவிலக்கணம் (எழுத்தியல்பு).
2. லிகிதம் (எழுத்து ஞானம்).
3. கணிதம் (எண்ணூல்).
4. வேதம் (முதல் நூல்).
5. இதிகாசம், புராணம் (பூர்வ கதை).
6. வியாகரணம் (இலக்கணம்).
7. சோதிட சாஸ்திரம் (வானநூல்).
8. தரும சாஸ்திரம் (அற நூல்).
9. நீதி சாஸ்திரம் (நீதி நூல்).
10. யோக சாஸ்திரம் (யோக நூல்).
11. மந்திர சாஸ்திரம் (மந்திர நூல்).
12. சகுண சாஸ்திரம் (நிமித்த நூல்).
13. சிற்ப சாஸ்திரம் (மனையடி நூல்).
14. வைத்திய சாஸ்திரம் (மருத்துவ நூல்).
15. உருவ சாஸ்திரம் (உடல் லட்சணம்).
16. ஸப்தப் பிரம்மம் (ஒலிக்குறி நூல்).
17. காவியம் (காப்பியம்).
18. அலங்காரம் (அணியிலக்கணம).
19. மதுர பாஷணம் (சொல் வன்மை).
20. நாடகம் (கூத்து).
21. நிருத்தம் (நடன நூல்).
22. வீணை
23. வேணு (புல்லாங்குழல்).
24. மிருதங்கம்
25. தாளம்
26. அஸ்திர பரீட்சை
27. கனக பரீட்சை (பொன் மாற்று).
28. ரத பரீட்சை (இரதம் ஓட்டல்).
29. கஜ பரீட்சை (யானைத் தேர்வு).
30. அஸ்வ பரீட்சை (குதிரைத் தேர்வு).
31. ரத்தின பரீட்சை
32. பூமி பரீட்சை
33. சங்கிராம விலக்கணம் (யுத்த முறை விதி).
34. மல் யுத்தம் (மற்பிடி).
35. ஆகர்ஷணம் (அழைத்தல்).
36. உச்சாடணம் (அகற்றல்).
37. வித்வேஷணம் (பகை மூட்டல்).
38. மதன சாஸ்திரம் (கொக்கோகம்).
39. மோஹனம் (மயங்குதல்).
40. வசீகரணம் (வசியம்).
41. இரச வாதம (உலோகங்களைப் பொன் ஆக்கல்).
42. காந்தருவ வாதம் (காந்தர்வர்களைப் பற்றிய ரகசியங்கள்).
43. பைபீல வாதம் (விலங்கு மொழியறிவு).
44. கவுத்துவாதம் (துக்கத்தை இன்பமாக மாற்றுதல்).
45. தாது வாதம் (நாடி நூல்).
46. காருடம் (மந்திரத்தால் விஷமகற்றல்).
47. நஷ்டப் பிரச்சனம் (சோதிடத்தால் இழப்பு கூறல்).
48. முட்டி (சோதிடத்தால் மறைந்தன கூறல்)
49. ஆகாயப்பிரவேசம்
50. ஆகய கமனம் (வானில் மறைந்து உலாவுதல்).
51. பரகாயப் பிரவேசம் (கூடு பாய்தல்).
52. அதிருசியம் (தன்னை மறைத்தல்).
53. இந்திர ஜாலம் (ஜால வித்தை).
54. மஹேந்திர ஜாலம் (அதிசயம் காட்டல்).
55. அக்கினி ஸ்தம்பம் (நெருப்பைக் காட்டல்).
56. ஜல ஸ்தம்பம் (நீர் மேல் நடத்தல்).
57. வாயு ஸ்தம்பம் (காற்றுப் பிடித்தல்).
58. திருஷ்டி ஸ்தம்பம் (கண்கட்டல்).
59. வாக்கு ஸ்தம்பம் (வாயைக்கட்டல்).
60. சுக்கில ஸதம்பம் (இந்திரியங்கட்டல்).
61. கன்னஸ்தம்பம் (மறைந்ததை கண்டு பிடிக்க முடியாத செயல்).
62. கட்கஸ்தம்பம் (வாட் சுழற்சி).
63. அவஸ்தைப் பிரயோகம் (ஆன்மாவை அடக்கல்).
64. கீதம்.

தொகுத்தவர் : திருமதி. கமலா மாரியப்பன்.

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

வியாபகத்வாத்—எல்லாவுலகங்களிலும் பரந்திருப்பதனால் என்பது இதன் பொருள். பரத்தலாவது—உள்ளிடத்திலும் வெளியிடத்திலுமாக எல்லாவிடங்களிலும் பரந்திருத்தலென்று கருதப்பட்டபடியால், ஸகல லோகங்களிலும் உள்ளிடம் புறவிடம் என்ற வாசியின்றிக்கே எல்லாவிடங்களிலும் வியாபித்திருக்கை என்பது தேறிய கருத்தாகும். இது பரப்ரஹ்மத்திறகே உரியதொரு தருமம்; 'எல்லாக் காலத்திலும் உள்ளவனும் எல்லாவிடங்களிலும் உள்ளவனும் எல்லாவற்றிலும் உட்புகுந்து வியாபித்தவனும் அதற்குத் தக்கவாறு மிகவும் நுண்ணியவனுமாக எவன் உள்ளானோ அத்தகைய மாறுதலேதுமில்லாத பரமாத்மாவை அறிவுடையவர்கள் எல்லாப் பிராணிகளுக்கும் முதற்காரணமாகக் காண்கின்றனர்' (முண்டக 1-6), 'எந்த ப்ரஹ்மத்தாலே ஆகாசமும் சுவர்க்க லோகமும் பூலோகமும் வியாபிக்கப்பட்டதோ' (தைத்-நாரா-3), 'பரமபதத்தில் மரம்போல் அசையாமல் (=யாரையும் பொருட்படுத்தாமல்) ஒருவன் இருக்கிறான். அத்தகைய புருஷனான வாஸுதேவனால் இவ்வுலகமெல்லாம் வியாபிக்கப் பெற்றது' (ச்வேதா-3-9), 'இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமான எல்லாப் பொருள்களையும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்திருக்கிறான்' (தைத்-நாரா-25), 'எல்லாவற்றினுள்ளும் உட்புகுந்து நியமிப்பவன் எல்லார்க்கும் ஆத்மாவான பரமாத்மா' (தைத்-ஆர-3-11) என நிவை முதலான நூற்றுக்கும் மேற்பட்ட ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் பரப்ரஹ்மம் தன்னைத் தவிர்த்த எல்லாவுலகங்களிலும் வியாபித்துள்ளதென்று அறிவிக்கப்படுதலால்-என்க.

அந்த வியாபித்தலென்பது-அதே ஸர்க்கத்தில் 'எல்லாப் பிராணிகளிடமும் ப்ராஹ்மணர்களிடமும் பசுக்களிடமும் எல்லாத் திசைகளிலும் ஆகாசத்திலும் மலைகளிலும் காடுகளிலும் நீர் அந்தர்யாமியாயிருந்து யோகிகளால் காணப்படுகிறீர்' (22) என்று விஷ்ணுவின் அவதாரமான இராமனுக்குச் சொல்லப்பட்டு, அது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தைச் சாதித்துத் தருகிறது.

ஸர்வஜ்ஞத்வாத் — எல்லாவற்றையும் அறிவதனால் என்பது இதன் பொருள். இது ப்ரஹ்மத்தின் தனித்தன்மையாகும்; "எவன் எல்லாப் பொருள்களையும் அறிகிறானோ, எவன் அப்பொருள்களின் தனித்தன்மைகளனைத்தையும் அறிகிறானோ' (முண்டகம் 1-10) என்று ப்ரஹ்மத்திற்கு ஸர்வஜ்ஞத்வம் கூறப்பட்டதனால் என்க. அது அதே ஸர்க்கத்தில் 'நீர் உலகனைத்தையும் படைப்பவர், மிகவும் மேம்பட்டவர், அறிவாளிகளில் சிறந்தவர்' (6) என்று விஷ்ணுவுக்குக் கூறப்பட்டு, அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தை அறிவிக்கின்றது.

அநந்தேக்ஷண சரண சிரோவத்த்வத:—எண்ணிலாத் திருக்கண்களையும் திருவடிகளையும் திருமுடி (தலை) களையும் உடைமையினால் என்பது இதன் பொருள். இது பரப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையாகும்; 'பரமாத்மா எல்லாப் பக்கங்களிலும் பல கண்களையும் பல முகங்களையும் பல கைகளையும் பல திருவடிகளையும் உடையவர்' (ச்வேதா-3-3, தைத்-நாரா-14), 'புருஷனெனப்படும் பரமாத்மா ஆயிரம் தலைகளையும் ஆயிரம் கண்களையும் ஆயிரம் திருவடிகளையும் உடையவர்' (புருஷஸூ-1), 'பல திருமுகங்களையும் பல திருக்கண்களையும் கொண்ட தனது உருவத்தை பகவான் அர்ஜுநனுக்குக் காட்டினான்' (கீதை 11-10) என்றிவை முதலிய ச்ருதி ஸ்ம்ருதிகளால் பரப்ரஹ்மம் அத்தகையதென்று அறிவிக்கப்பட்டிருத்தலால் என்க. இவையோவெனில்—அதே ஸர்க்கத்தில் 'நீர் திருவின் மணாளர், ஆயிரந் திருவடிகளையும் நூறு தலைகளையும் ஆயிரங்கண்களையும் கொண்டவர்' (23) என்று விஷ்ணுவுக்குக் கூறப்பட்டனவாய்க் கொண்டு அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவிக்கின்றன. இதில் நூறுதலைகளென்பது முன் பின்னோடு சேர வேண்டியிருப்பதனால் ஆயிரந்தலைகளென்று பொருள்பட்டு எண்ணற்ற தலைகளுடைமையைச் சொல்லுவதில் நோக்குடையதாகக் கொள்க.

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

ஸர்வயஜ்ஞாராத்யத்வாத்—எல்லா யாகங்களாலும் ஆராதிக்கப்படுவதனால் என்பது இதன் பொருள். இது பரப்ரஹ்மத்தின் தனிப்பட்ட தன்மையாகும்; 'ஸர்வஹுத் என்னும் அந்த ப்ரஹ்மத்திலிருந்து ஜகத் காரணமான வீர்யம் உண்டாயிற்று' புருஷ ஸூ-9) என்று ப்ரஹ்மத்திற்கு யாகங்கள் அனைத்தாலும் ஆராதிக்கப்படுந் தன்மை கேட்கப்படுதலால் என்க. ஸர்வம் ஹூயதே அஸ்மை (=இவன் பொருட்டு எல்லாப் பொருள்களும் ஹோமம் செய்யப்படுகின்றன) என்ற வ்யுத்பத்தியின் (=சொல்லைப் பிரித்துப் பொருள் கொள்ளும் முறைமையின்) மூலமாக ஸர்வஹுத் என்ற சொல் எல்லா யாகங்களாலும் ஆராதிக்கப்படுமவனை என்னும் பொருளைக் கூறுதலாலும், "எல்லா யாகங்களாலும் ஆராதிக்கப்படுமவனும் அவற்றுக்குப் பலனளிப்பவனும் நானேயன்றோ?' (கீதை 9-24) என்று எல்லா யாகங்களாலும் ஆராதிக்கப்படுகை ஸ்மரிக்கப்படுதலாலும் என்க. இத்தன்மை இங்கு 'யஜ்ஞமும் வஷட்காரமும் ஓங்காரமும் மிகவுயர்ந்த தவமும் நீ'(21) என்ற ச்லோகத்தில், இஜ்யதே இதி யஜ்ஞ: (=ஆராதிக்கப்படுதலால் யஜ்ஞமாமவன்) என்று பொருள்படுகின்ற யஜ்ஞ சப்தத்தால் விஷ்ணுவினிடம் அறிவிக்கப்பட்டு அது அப்பெருமானுக்குப் பரமாத்மத்வதைச் சாதிக்கின்றது.

புண்டரீகப்ரப நயநதயா—தாமரை போன்ற கண்களையுடைமையினால் என்பது இதன் பொருள். இந்தப் புண்டரீகாக்ஷத்வம் பரப்ரஹ்மத்தின் தனித்தன்மை என்பது முன்பே பால காண்டத்திலுள்ள காரணங்களை விளக்கிய போது மிக விவரமாக முதலிக்கப்பட்டபடியால் இப்போது மீண்டும் விளக்கப்படவில்லை. இத்தன்மை யுத்தகாண்டம் நூற்றிருபத்திரண்டாம் ஸர்க்கத்தில் 'தாமரைக் கண்ணனே தடந்தோளனே அகன்ற திருமார்பையுடையவனே பகை

வரைத் தபிக்கச் செய்யுமவனே ஆயுதந்தரிப்பவருள் உயர்ந்தவனே இராமபிரானே எங்களுடைய நல் வினையால் உன்னால் இராவணவத மென்னும் காரியம் செய்யப்பட்டது' (2) என்று இராமனாக அவதரித்த விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டு அது அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத் வத்தை நிலைநாட்டுகிறது.

வேத ஸம்ஸ்காரத்த்வாத்—வேத மாகிய ஸம்ஸ்காரத்தை — மூச்சுக் காற்றை உடைமையினால் என்பது இதன் பொருள். வேதங்கள் பரப்ர ஹ்மத்தின் ஸம்ஸ்காரமென்பது— 'எப்படி ஈரக்கட்டையில் ஊதியோ விசிறியோ உண்டு பண்ணப்பட்ட நெருப்பிலிருந்து வெவ்வேறான புகை கள் கிளம்புகின்றனவோ, அப்படியே இந்தப் பெரிய பரமாத்மாவினிட மிருந்து மூச்சுக் காற்றுப்போல் அநா யாஸமாகக் கிளம்புகின்றன இவை. அவை யாவை எனின், ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வ வேதம் இராமாயணம் முதலிய இதி ஹாஸங்கள் விஷ்ணு புராணம் முத லான புராணங்கள் மற்றும் அறுபத்து நான்கு கலைகள் உபநிடதங்கள் ஸ்ம்ருதிகள் ப்ரஹ்மஸூத்ரம் தொடக்கமான ஸூத்ரங்கள் அவற் றின் பாஷ்யங்கள் அவற்றின் உரை கள் ஆகிய இவையெல்லாம் இப்பர மாத்மாவின் மூச்சுக்காற்றுப் போன் றன" (ப்ருஹதா 4-4-10) என்ற மந்திரத்தில் ருக்கு ஸாமம் முதலாகிய பாகுபாடு பெற்ற வேதங்களுக்குப் பரப்ரஹ்மத்தின் மூச்சுக் காற்றுப் போன்ற தன்மை கூறப்படுவதனால்— கிடைக்கின்றது. இத்தன்மை யுத்த காண்டம் நூற்றிருபதாம் ஸர்க்கத் தில் 'வேதங்கள் உன்னுடைய மூச்சுக் காற்றுக்கள், நீயில்லையேல் அவை யில்லை' (26) என்றவிடத்தில் விஷ்ணு வினிடம் கூறப்பட்டு அது அப்பெரு மானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறி விக்கின்றது.

ஸர்வேஷாம் தாரகத்வாத்—எல் லாப் பொருள்களையும் தாங்குவத னால் என்பது இதன் பொருள். எல்லா வற்றையும் தாங்குதலாவது — தன் கட்டளையினால் எல்லாப் பொருள் களையும் நிலை பெற்றிருக்கச் செய் தலேயாம். அது பரப்ரஹ்மத்திற்கே உள்ளதோர் தன்மையாகும்; 'ஓ கார்க்கியே, இந்தப் பரமாத்மாவின் தடையற்ற கட்டளையிலேயே ஸூர்ய சந்த்ரர்கள் நிலைத்து நிற்கின்றனர், ஆகாசமும் பூமியும் நிலைத்து நிற்கின் றன, க்ஷணம் முஹூர்த்தம் பகல் இரவு பக்ஷம் மாதம் ருதுக்கள் வருஷங்கள் என்ற காலங்களும் தரித்து நிற்கின் றன' (ப்ருஹதா 5-8-8) என்ற மந் திரத்தால் சூரியன் முதலான பொருள் களுக்குப் பரப்ரஹ்மத்தின் கட்டளைக் குட்பட்ட—தரித்து நிற்கும் தன்மை சொல்லப்பட்டிருப்பதனாலும், அப் படியே அதேயிடத்தில் சற்று முன்பு 'ஆகாசத்துக்கு மேலும் பூமிக்குக் கீழும் நடுவான பூமியிலும் ஆகாசத் திலும் முக்காலத்திலும் உள்ள எல்லாப் பொருள்களும் ஆகாசமென் னும் மூலப்ரக்ருதியிலேயே உண்டை யும் பாவும்போல் குறுக்கும் நெடுக்கு மாக இருக்குமென்று கூறினீரே, அந்த ஆகாசம் (மூலப்ரக்ருதி) எதுதன்னில் இருக்கிறது' என்று கார்க்கி கேட்ட கேள்வியும், 'ஹே கார்க்கீ நீ கூறிய அந்த ஆகாசமென்னும் மூலப்ரக்ரு திக்கு ஆதாரமாயுள்ளது இந்த அக்ஷர மாகிய (எங்கும் பரந்து, அழிவோ மாறுதலோ ஏதுமற்ற) பரப்ரஹ்மமே. இது தன்னையே அந்தணர்கள் தொழு கின்றனர்' (ப்ருஹதா 5-8-6) என்று யாஜ்ஞவல்க்யர் கூறிய விடையுமாக உள்ள வாக்கியங்களினால் முக்காலங் களிலுமுள்ள பொருள்களனைத்துக் கும் ஆதாரமான மூலப்ரக்ருதிக்கும் ஆதாரமாக ப்ரஹ்மம் கூறப்படுத லால், எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாயிருத்தலென்பது ப்ரஹ்மத் தினிடம் கிடைப்பதனாலும் என்க.

ஆகையால்தான்—அக்ஷராதி கர ணத்தில் 'கார்க்கியே எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமான ஆகா சத்திற்கு ஆதாரமானது இந்த அக்ஷரமேதான். இதையே ப்ராஹ்மணர்கள் வணங்குகின்றனர்" என்னுமிடத்தில் அக்ஷர சப்தத்தினால் குறிக்கப் பெற்ற பொருள் மூலப்ரக்ருதியா ஜீவாத் மாவா பரமாத்மாவா என்று ஸந்தே ஹத்தைக் காட்டி, மூலப்ரக்ருதி தான் என்று கேள்வியைக் கிளப்பி, மூல ப்ரக்ருதி வரையிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாயிருத்த லென்பது மூலப்ரக்ருதியில் பொருந் தாமையால் ப்ரஹ்மத்தினிடமே பொருந்துதலால் அக்ஷர சப்தத்தின் பொருள ப்ரஹ்மமே என்று 'அக்ஷரம் அம்பராந்தத்ருதே:' (ப்ரஹ்மஸூ 1-3-9) பஞ்ச பூதங்களில் சேர்ந்த ஆகாசத்திற்கும் காரணமாகிய மூல ப்ரக்ருதியையும் தாங்குதல் (உப நிஷத்தில்) கூறப்பட்டுள்ளதனால் அப் படித் தாங்கும் அக்ஷரமானது பர ப்ரஹ்மமேதான் என்று ஸித்தாந்தம் செய்துவிட்டுப் பிறகு அம்பராந்த சப்தத்தின் பொருளாகிய பூதஸூக்ஷ் மம் என்ற மூலப்ரக்ருதி வரையி லுள்ள எல்லாப் பொருளும் நிலைத்து நிற்பதென்பது பரப்ரஹ்மத்தின் கட் டளைக்குட்பட்டதே என்னும் இவ் விஷயம் 'ஸா ச ப்ரசாஸநாத்' (ப்ர ஹ்மஸூ 1-3-10)-அப்படி நிலைத்து நிற்பதும் பரப்ரஹ்மத்தின் கட்டளை யினால்—என்ற ஸூத்ரத்தினால் கூறப் பட்டது.

இதனால்—தன் கட்டளையினால் எல்லாப் பொருள்களையும் தரித்து நிற்கச் செய்யும் தன்மையானது ப்ர ஹ்மத்தின் தனிப்பட்ட பண்பென்பது ஸித்தித்தது. இந்தத் தன்மை ஸ்ரீராமாயணம் யுத்த காண்டம் நூற்றுப் பதினான்காவது ஸர்க்கத்தில் 'இப்பெருமான் இந்த ப்ரக்ருதி மண் டலத்தின் மேலுள்ள ஸ்ரீ வைகுண்டத் திலிருப்பவன், எல்லாப் பொருள்களை யும் தாங்குமவன் (நிலை பெற்றிருக்கச் செய்பவன்), சங்கு சக்கரம் கதை ஆகியவற்றை ஏந்தியவன்' (15) என்று விஷ்ணுவுக்குக் கூறப்படுகிறது. அங்ஙனமே நூற்றிருபதாம் ஸர்க்கத் தில் 'நீர் பர்வதங்களோடு கூடிய பூமி

யையும் மற்ற நீர் நெருப்பு காற்று ஆகாசமாகிய பூதங்களையும் தாங்கி நிற்கிறீர். இப்பூமி அழியும் காலத்தில் மூவுலகங்களையும் தேவர்-கந்தருவர்-அசுரர்களையும் வயிற்றில் தரித்துக்கொண்டு கடலில் பாம்பணையின் மேல் சயனித்துக் கொண்டிருப்பவராய் மார்க்கண்டேயாதி மஹர்ஷிகளால் காணப்படுகிறீர்' (13, 14) என்றவிடத்திலும் இத்தன்மை ஸ்பஷ்டமாகக் கூறப்படுகிறது. ப்ரஹ்மத்தின் தன்மையான-எல்லாவற்றையும் தாங்குதலென்பது விஷ்ணுவுக்குக் கூறப்பட்டு அது அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவித்தே தீருகின்றது.

. ஸலில சயநத:—கடல் நீரில் சயனித்திருப்பதனால் என்பது இதன் பொருள். தைத்திரீயோபநிஷத்து ஆறாம் ப்ரச்நம் முதலநுவாகத்தில் 'அம்பஸ்யபாரே புவநஸ்ய மத்யே நாகஸ்ய ப்ருஷ்ட்டே மஹதோ மஹீயாந் | சுக்ரேண ஜ்யோதீம்ஷி ஸமநுப்ரவிஷ்ட: ப்ரஜாபதி: சரதி கர்ப்பே அந்த:' என்பது முதல் மந்த்ரம். பரப்ரஹ்மம்—தனது ஒளியின் வாயிலாக சூரியன் முதலிய ஒளியுடைய பொருள்களில் நன்றாகப் புகுந்ததாய்க் கொண்டும், கரையில்லாத கடல் நீரிலும் சூரிய மண்டலத்திலும் பரம பதத்திலும் வாஸம் செய்து கொண்டும், பெரிய பொருள்கள் எல்லாவற்றைக் காட்டிலும் பெருமையுடையதாய்க் கொண்டும் அனைவருடைய இருதயத்தினுள்ளும் வியாபித்துள்ளது – என்பது இம்மந்த்ரத்தின கருத்து. இஙகு ப்ரஜாபதி சப்தத்தின் பொருளாகிய பரப்ரஹ்மத்திற்குக் கடலில் வாழ்ச்சியானது ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டது. இந்த ப்ரஜாபதி என்ற சொல் உலகில் ப்ரஜாபதி என்று பிரசித்தமாக வழங்கப்படுகிற நான்முகனைக் குறிக்காதோ எனில், குறிக்காது; பெரிய பொருள்கள் அனைத்தையும்விடப்பெரிதாயிருக்கை முதலான – இங்குக் கூறிய அடைமொழிகள் அவனிடம் பொருந்தாமையால்—என்க.

இங்ஙனம் அதே அநுவாகத்தில் எந்த ப்ரஹ்மத்தாலே ஆகாசமும், சுவர்க்கமும் பூமியும் வியாபிக்கப் பட்டதோ, எதனுடைய ஒளி – வெம்மைகளால் வளர்க்கப்பட்டு ஸூர்யன் தபிக்கிறானோ, எதனைக் கடல் நடுவே உள்ளதாக முக்காலமறிந்த பெரியோர் கருதுகிறார்களோ, எது நித்யமான பரமபதத்தில் உள்ளதோ, அதுவே ப்ரஹ்மம்' என்ற மூன்றும் மந்த்ரத்திலும் பரப்ரஹ்மம் கடலிலுள்ளதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறே மற்றுமுள்ள இடங்களிலும் காணத்தக்கது. இத்தன்மை யுத்த காண்டம் இருபதாம் ஸர்க்கத்தில் 'பூமி அழியும்போது நீர், கடல் நீரில் பாம்பணைமேல் சயனிப்பவராய்க் காணப்படுகிறீர்' (13) என்றவிடத்தில் விஷ்ணுவினிடம் கூறப்பட்டு அது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை நிலைநாட்டுகிறது.

ஸத்யதா அநாமயத்வ அவ்யக்தத்வை:—ஸத்யத்வம் அநாமயத்வம் அவ்யக்தத்வம் ஆகிய இவற்றாலே என்பது இதன் பொருள். இங்கு ஸத்யத்வமாவது—உருவத்தாலும் பண்பினாலும் குறுகுதல் பெருகுதலின்றி எப்போதும் ஒரே விதமாயிருத்தல். அது 'ஸத்யமானதும் அறிவு வடிவானதும் இடம் காலம் பொருள் என்றிவற்றால் அளவுபடாததுமாயிருக்கும் ப்ரஹ்மம்'(தைத்தி-ஆன-1) என்ற ச்ருதியில் பரப்ரஹ்மத்தின் தன்மையாக அறியப்பட்டது. அநாமயத்வமாவது - உடல் உள்ளம் முதலியவற்றில் எவ்வகை நோயுமில்லாதிருத்தல். அதுவும் 'பரமாத்மா—புண்ய பாபங்கள் மூப்பு மரணம் துன்பம் பசி தாகம் ஆகியவையில்லாதவன்' (ச்சாந்தோ 8-7-1) என்றிது முதலிய ச்ருதிகளால் பரப்ரஹ்மத்தின் தருமமாக அறிவிக்கப்பட்டது. அவ்யக்தத்வமாவது - பக்தியில்லாதவர்களால் கண் முதலிய பொறிகளின் வாயிலாக அறிய முடியாதிருத்தல். அதுவும் 'எது கண் முதலியவற்றால் அறிய முடியாததோ, எது கை முதலானவற்றால் பிடிக்க முடியாததோ' (முண்டக 1-1-6), எந்தப் பரமாத்மா கண்ணால் காண முடியாதவனாய் எல்லாவற்றையும் தான் காண்கிறானோ' (ப்ருஹதா 5-7-27), 'ப்ரஹ்மம் கண்ணால் காணப்படாததும் வாயால் சொல்லப்படாததும் ஆகும்' (முண்டக 3-1-8), 'அர்ஜுநா, எப்படிப்பட்டவனாக என்னை நீ இப்போது பார்த்தாயோ அப்படிப்பட்ட நான்-பக்தி யில்லாமல் வெறுமனே வேதமோதியோ தவஞ்செய்தோ தானம் வழங்கியோ பார்க்க முடியாதவன்' (கீதை 11-53) என்றிவை முதலிய ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் பரப்ரஹ்மத்தின்பான்மையென்று பகரப்பட்டது. இவை முறையே யுத்த காண்டம் நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் 'நீர் அழிவற்றவர், பரப்ரஹ்மமாயிருப்பவர், ஸத்யமானவர் (=உருவம் பண்பு ஆகியவற்றால் குறுகுதல் பெருகுதலின்றி எப்போதும் ஒரே விதமாயிருப்பவர்), உலகமுண்டாவதற்கு முன்பும் பின்பும் நடுவிலும் உள்ளவர்' (15) என்ற நான்முகன் வார்த்தையிலுள்ள ஸத்ய சப்தத்தாலும், எழுபத்திரண்டாம் ஸர்க்கத்தில் 'அந்த வீரனான இராமனை அநாமயனான (=உடலிலும் மனதிலும் நோயற்ற) நாராயணனாக எண்ணுகிறேன்' (11) என்ற இராவணன் பேச்சிலுள்ள அநாமய சப்தத்தாலும், நூற்றிருபத்திரண்டாம் ஸர்க்கத்தில் 'இவ்விராமன் அவ்யக்தமானதும் (=பக்தியற்றவர்களால் பொறிகளின் மூலம் அறிய முடியாததும்) வளர்வு தேய்வு முதலிய மாறுதலில்லாததுமான-மனிதவுருக்கொண்ட ப்ரஹ்மமென்று நான்முகன் முதலியவர்களால் கூறப்பட்டான்' (32) என்ற தசரத வாக்கியத்திலுள்ள அவ்யக்த சப்தத்தினாலும் இராமனுருவந்தாங்கிய விஷ்ணுவுக்குக் கூறப்பட்டு அவை அப்பிரானுக்குப் பரப்ரஹ்மமாந்தன்மையை நிலை நாட்டுகின்றன.

(தொடரும்)

# திருமாலிருஞ் சோலைப் பெருமாள்

பாரதம் பாடிய பெருந்தேவனுர், திருவேங்கடத்தை 'தேனேங்கு சோலைமலை' என்றும், திருமாலிருஞ் சோலையை 'வானேங்கு சோலை மலை' என்றும், இவற்றுடன் திருவரங்கத்தையும் அத்தியூரையும் சேர்த்துத் திருமாலுக்குரிய பக்திப் பெரும்பண்ணைகள் இவை என ஒரு வெண்பாவில் அருளிச் செய்கிறுர்;

தேனேங்கு சோலைத் திருவேங் கடம் என்றும்,
வானேங்கு சோலைமலை என்றும்— தான் ஒங்கு
தென்னரங்கம் என்றும் திருஅத்தி யூரென்றும்
சொன்னவர்க்கும் உண்டோ துயர்?

இம்மலையை யார் வந்து கண்டாலும், அப்படிக் கண்டவருடைய மயக்கத்தை ஒழிக்கிறதாம். அவரவர் இஷ்ட தெய்வம் போலத் தோன்றி, அவரவர் கொண்டிருந்த மயக்கத்தை ஒழித்து, அறிவைத் தெளிவுபடுத்தும் ஆற்றல் இம்மலையின் காட்சிக்கே உண்டு என்று கருதுகிறுர் இப்புலவர்.

நம்மாழ்வாரும் வைகுந்தம், பாற்கடல், திருவேங்கடம், திருமாலிருஞ் சோலை என்று குறிப்பிடுகிறுர். திருமாலிருஞ்சோலை மலையையும், கோயிலையும் பற்றிய 106 பாசுரங்களில், இம்மலையைப் புகழ்வனவாகவும் அமைந்திருப்பதைக் காண்கிறேம். இம்மலை முழுவதும் ஒரு கோயிலாக அமைந்திருக்கின்ற கருத்தைத் திவ்ய பிரபந்தப் பாசுரங்களில் காண்கிறேம்.

பாண்டிய நாட்டு வைணவத் திருத்தலங்கள் பதினெட்டில் திருமாலிருஞ்சோலை முதன் முதலில் போற்றப்படுகின்றது. இத்தலத்தை மங்களாசாசனம் செய்த ஆழ்வார்களில் அறுவரான பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பொய்கை ஆழ்வார், பேயாழ்வார் ஆகியோர் இத்தலத்தை அழகர்மலை என்றே கூறுவர். இக்கோயிலிலுள்ள மூர்த்திகள் அழகையே அழகு செய்யும் பான்மையுடன் வீற்றிருக்கும் காட்சி நம்மைக் கவர்கின்றது.

இறைவன்—அழகர், கள்ளழகர், மாலாலங்காரர்.

இறைவி — சுந்தரவல்லி நாச்சியார்.

நின்ற திருக்கோலம் — கிழக்கு நோக்கியவர்.

பிரத்தியட்சம்—மலையத்வஜ பாண்டியனுக்கும், தர்ம தேவதைக்கும்.

உத்சவமூர்த்தி ஆணிப்பொன்னல் செய்யப்பட்டு, நம் கண்களைக் கவர்கின்றுர்.

மூலவரும், உத்சவரும் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத இன்பம் அளிக்கின்றனர். இருவரும் நம் மனத்தில் ஊடுருவிச் செல்கின்றனர்.

திருமாலிருஞ்சோலைத் தலம் மதுரைக்குத் தெற்கே 12 மைல் தூரத்திலுள்ளது. சந்நிதி கோபுர வாசலில் 18-ஆம் படியில் கருப்பண்ணசுவாமி காவலாயிருக்கின்றுன்.

நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரம் ஒன்று நம் நெஞ்சை அள்ளுகின்றது.

முடிச் சோதியாய் உனது முகச் சோதி மலர்ந்ததுவோ?
அடிச் சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச் சோதி ஆடையொடும் பல்கலனும் நின்பைம் பொன்,
கடிச் சோதி கலந்ததுவோ?
திருமாலே! கட்டுரையே'

— *திருவாய்மொழி 3-1-1.*

அழகப்பிரானுடைய அழகை வசனத்தில் பார்ப்போம் இதனடியில்:

'உன் திருமுகத்தின் ஒளி முடிச் சோதியாய் மலர்ந்ததோ? உன் திருவடிகளின் ஒளியழகு நீ நிற்கும் ஆசனத் தாமரையாய் மலர்ந்ததோ? உன்னுடைய பசும் பொன் போன்ற அழகிய திவ்விய அரையின் ஒளியழகு இயல்பாக ஒளி வீசும் பீதாம்பரம் முதலான பல ஆபரணங்களால் கலந்ததோ? இறைவா! இலக்குமிப் பிராட்டியோடு கூடிய நீ அருளச் செய்ய வேண்டும்' என நம்மாழ்வார் பாடுகிறுர்.

அடுத்து, பெரியாழ்வார் அருளிச் செய்த திருமொழி கூறும் பொருள் பார்ப்போம்.

'விளை நிலங்களில் வளர்ந்த தினைக் கதிர்களைக் கிள்ளி வந்து, அவைகளை எம்பெருமானே! உனக்குப் புதிய உணவாக அமுது செய்விப்போம்.

அச்சமயம் உன் திருவடிகளைப் பாடுவோம்.

'உன் பொன் போன்ற திருவடிகள் என்றென்றும் வாழ வேண்டும்'! எனத் துதிப்போம்.

குறவர் கூட்டங்கள் அப்பிராசத்தையே விருந்தினர்களோடு உண்ணுகிற, அழகிய திருமாருஞ்சோலையில் நின்ற திருக்கோலத்தைக் கொண்ட எம்பெருமானே! அழகனே! உனக்கே தொண்டு பண்ணிக்கொண்டிருக்கும் தவத்தையுடைய அடியேன், இனி மேல் புறம்பே போய் வேறொருவனுக்கு வேலை செய்துகொண்டு, அவனுடைய வீட்டு வாசலிலே நிற்க மாட்டேன்.

டாக்டர் ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு
கோவை.

அப்படி நிற்க வேண்டியதாக வருமானல் அது உன்னுடைய மேன்மைக்குக் குறையாகும். அழகனே இதை உன் திருவுள்ளத்தில் கொண்டருள வேண்டும்.

முதலாழ்வார்களில் மூன்றும் ஆழ்வார் பேயாழ்வார் எனப் பெயர் பெற்றவர். அவர் திருமாலிருஞ்சோலை அழகரை அநுபவிப்பதை நாமும் அநுபவிப்போம் :

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல்
வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்
போல்—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை
வண்பூங்கடிகை
இளங்குமரன் தன் விண்ணகா
வேங்கடம் திருமாலிருஞ்சோலை

சோலைமலையைக் குறித்துப் பெரியாழ்வார் பாடுகிறுர் :

மன்னு குறுங்குடியாய்!
வெள்ளறையாய்! மதிள்சூழ்
சோலைமலைக் காரே.

'மாலிருஞ்சோலை எம்மாயன்' என்றும் பெரியாழ்வார் சோலைமலை அரசரை வழிபடுகிறுர். 'சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலை' யானது திருமாலின் உறைவிடம் என்றே உறுதி அளிக்கிறுர், நம் பெரியாழ்வார்.

திருமாலிருஞ்சோலையின் இயற்கை வளங்களிலும், வனப்புகளிலும் பெரியாழ்வார் தம் இஷ்ட தெய்வத்தின் ஆயிரம் அழகுகளைக் காண்கின்றுர்.

ஆயிரம் தோள் பரப்பி
முடி ஆயிரம் மின்இலக
ஆயிரம் பைந்தலைய

என்று வர்ணிக்கிறுர். அனந்த சயனன் ஆளும் மலை என்ற பாசுரம் நம்மை பிரம்மிக்கச் செய்கிறது. இவ்வாக்கிலே தெய்வ ஆட்சியின் உன்னத மாட்சி, எல்லையற்ற சௌந்தரியம் குறிக்கப்படுகிறது.

அருவியின் பெருக்கு, ஆறுகளாகவும் சுனைகளாகவும் காட்சி அளித்து, இறைவனது அருட்பெருக்கைப் புலப்படுத்துகின்றது.

'சுந்தரத் தோளுடையான்', எனத் திருமாலிருஞ்சோலை எம்பெருமானை, ஆண்டாள் ஆரவாரிக்கிறுள். இம் மூர்த்தியின் தோளைத் 'திரு விளையாடு திண்தோள்', எனப் பெரியாழ்வாருடைய தெய்வத் திருமகள், தெவிட்டாத அன்புடன் அழைக்கிறுள். மீண்டும்,

'சிலம் பாறுடை மாலிருஞ் சோலை
நின்ற சந்திரன்'
எனப் புகழ்கிறுள்.

மீண்டும் நம்மாழ்வார் வர்ணனையைக் காண்போம்.

மயல் மிகு பொழில்சூழ்
மாலிருஞ் சோலை.

பக்தர்களுக்கு வழிகாட்டும் முறையில் இப்பதிகங்கள் அமைந்திருக்கின்றன. திருமாலிருஞ்சோலை அழகனை, மனிதவர்க்கத்தின் இளமை கெடுவதன்முன் அடைந்து பயன்பெறும்படி நம்மாழ்வார் எச்சரிக்கிறுர்

திருமாலிருஞ்சோலையை நம்மாழ்வார் திருமாலின் அதிமுக்கியமான திருப்பதிகளில் ஒன்றுகக் கருதுகிறுர்.

தென்கொள திசைககுத
திலதமாய் நின்ற
திருமா லிருஞ்சோலை

திருமாலிருஞ்சோலை அழகனை திருமாலின் நினைவுடன் குதூகலிக்கிறுர்;

திருமா லிருஞ்சோலை
மலை என்றேன், என்ன
திருமால் வந்(து)என,
நெஞ்சு நிறையப் புகுந்தான்;
மற்றும் பாடுகிறுர்;
இருப்பேன் என்(று)என்
நெஞ்சு நிறையப் புகுந்தான்,
விருப்பே பெற்(று) அமுதம்
உண்டு களிததேனே.

சோழமலையில் அழகர்—சுந்தர ராஜப் பெருமாள் பிரசித்தமாகப் பக்தர்களுக்குக் காட்சியளித்துக் கொண்டே இருப்பதை யாவருக்கும் எடுத்துரைக்கிறுர், நம்மாழ்வார்.

முஸ்லிம்கள் தென்னுட்டில் படையெடுத்து வந்த காலத்திலே, ஸ்ரீ ரங்கநாத விக்கிரகம் ஸ்ரீ ரங்கத்திலிருந்து அழகர் கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டது என்றும், கோயிலுக்கு மேற்கே பள்ளத்தாக்கிலுள்ள 'அழகிய மணவாளன் கிணறு' என்ற மஞ்சட் கிணற்றில் மறைத்து வைக்கப்பட்டிருந்ததென்றும் தெரிய வருகிறது.

அழகர் கோயிலில் விக்கினேசுவரர் இருப்பது கண்கொள்ளாக காட்சி. இங்குத் திருநீறு பிரசாதமாக வழங்கப்படுகின்றது.

அழகர் கோயிலிலுள்ள 'பதினெட்டாம்படிக் கறுப்பன்' என்ற கருப்பண்ணசுவாமியை அணுகி, அவருக்கு அஞ்சலி செலுத்துவோம். கருப்பண்ணசுவாமியின் சந்நிதி, மக்கள் கண்களில், அழகர் சந்நிதிக்கு அடுத்த முக்கிய சந்நிதியாகவே காணப்படுகின்றது. இந்தத் தெய்வத்திற்கு இங்கே விக்கிரகம் இல்லை. ஆனல் பதினெட்டாம்படிக் கோபுரம் என்று சொல்லப்படும் முக்கிய கோபுரத்தின் பெரிய கதவுகளையே இந்தத் தெய்வத்தை வழிபடுவதற்குரிய அறிகுறிகளாகக் கொள்கிறுர்கள். சந்நிதியின் பரிசாரர்கள் நாள்தோறும் இந்த தெய்வத்தைப் பூசிக்கிறுர்கள். குயவர் ஒருவர் பூசாரியாக வந்து தேங்காய் உடைத்து, விபூதிப் பிரசாதம் வழங்குகிறுர்.

அழகர் கோயிலில் வசந்த விழா, முப்பழ விழா, பிரம்மோத்ஸவம், கருடசேவை, பவித்திர விழா முதலான பல விழாக்கள் நடைபெறுகின்றன. இவற்றுள் கோடை விழா மிகவும் பிரசித்தமானது. இவ்விழா சித்ரா பௌர்ணமியில் நிகழ்கின்றது

தென்றல் வீசும் காலத்திலே, கோடைத் திருவிழாக் கொண்டருளுகிருன் ழகப்பிரான். அச்சமயம் மதுரைக்கு எழுந்தருளுகிருன். தல்லா குளத்திற்கு வந்து, விடியற் காலத்தில் குதிரை வாகனத்தில் காட்சி அளிக்கிருன், பெருமிதமாக.

பொற குடையும் வெளளிக்
குடையும பொலிந்திலங்க,

கொடிகள் இலங்க, முரசுகள் முழங்கச் செல்லுகிருன், அழகன். வைகை நதியில், வண்டியூர் மண்டபத்தில் வீற்றிருப்பதையும், அப்பொழுது சூர்யன அஸ்தமித்து, மாலை இருள் சூழ்ந்து கொள்ளத் தீவட்டிகள் பிரகாசிப்பதையும், வாணவெடிக் காட்சிகள் நடப்பதையும், அழகர்பெருமான் அனந்தாழ்வான் மீது பவனி வருவதையும் முன்னழகைக் கண்ட பக்தகோடிகள் ஆரவாரிக்கின்றனர். அழகப்பிரான் வீரதெய்வமாய்த் திகழ்கின்ருன். இத்தெய்வத்தை முகமலர்ந்து துதிப்பதும், கடவுளை வாழ்த்துவதும் கூடியிருக்கும் ஜனத்திரளின் பக்திநெறியைக கண்டு களிப்போம். அழகரைக் கைகுவித்துப் புகழ்வோம்;

கொடிமினல் அடைந்தசோதி
மழகதிர் தவழ்ந்தஞான
குலகிரி மகிழ்ந்துமேவு
பெருமாளே!

என்று வரும் அருணகிரியார் வாக்கிலே, சோலைமலை ஞானகுலகிரி என்றும் பாராட்டப் பெறுவதைக் காண்கிரேம்.

அழகர் கோயிலைச் சோழ மன்னர்களும் பிற்காலப் பாண்டியர்களும் ஆதரித்து வந்தார்கள். விஜய நகர மன்னர்களும், நாயக்க அரசர்களும் அழகர் கோயிலுக்கு ஆதரவு அளித்தார்கள்.

---

# ஆடிப்பூரத்தில் அவதரித்த ஆண்டாள்

திருஆடிப் பூரத்தில்
திங்களொளித் திருநாளில்
மருள்நீக்க இம்மணணில்
வந்துதித்த திருமகளே!
அருளாளர்ப் பெரியாழ்வார்
அமைத்தப்பூந் தோட்டத்தில்
ஒருமகளாய்ப் பூமித்தாய்
உயர்மகளாய் வந்துதித்தார்!

இன்றுஆடிப் பூரம்தான்
இனிதாக நமக்காக
நன்மைசெய்ய வநத அந்த
நன்ஞளில் கோதையெனும்
அன்புடையார் அவதரித்தார்
அவராலே வைகுந்தம்
தன்னிலையில் தாழ்ந்துஆண்டாள்
தகுதியைமேல் உயர்த்தியதே!

பெருமையுள்ள பெரியாழ்வார்
பெற்றபெண்ணே பிறந்ததனல்
திருஆடிப் பூரத்தின்
திருநாளின் சீர்மைக்கே
ஒருநாளும் ஈடின்றி
ஓங்கியதே அந்நாளே!
ஒருவருமே ஒப்பின்றி
உயர்ந்திட்டார் ஆண்டாளே!

திருஆடிப் பூரமெனும்
திருநாளே மேன்மேலும்
பெருமையாய் விளங்கிடவே
பிறந்திட்டார் சுடர்க்கொடியார்
விருப்பூட்டும் தமிழகத்தின்
வில்லிபுத்தூர் மிளிர்ந்திடவே
திருமகளாம் கோதையென்பார்
திருவரங்கன் தனைமணந்தார்!

அரங்கனே மிகவிரும்பும்
அழகுமலர்த் துளசியினைச்
சரமாக்கி மாலைகட்டித்
தாம்சூடிப் பின்னரதை
அரங்கனுக்கே சூட்டி அவன்
அழகதனைக் கண்டு வந்த
பரவசத்தால் திருப்பாவை
பாட்டிசைத்துப் புகழ்ந்திட்டார்!

பூமாலை சூட்டியவர்
புகழாளன் எம்பெருமான்
நாமமதைத் திருப்பாவை
நாய்ச்சியார் திருமொழியாம்
பாமாலை யால்பாடிப்
பதமலரில் படைத்திட்டார்
நாமெல்லாம் போற்றிடவே
நாரணனை விழைந்தேற்ருர்!

"கோதையார்" தோன்றியஊர்
குவலயத்தார் புகழும்ஊர்
மாதவன் வாழும்ஊர்
மணிமாடம் ஒளிரும்ஊர்
காதலால் பக்திசெய்வோர்
களிப்புடனே உய்யும்ஊர்
வேதங்கள் ஒலிக்கும்ஊர்
வில்லிபுத்தூர் என்னும்ஊர்!

பாதகங்கள் தீர்க்கும்ஒண்
பரமனடி காட்டும்நால்
வேதங்கள் அனைத்திற்கும்
வித்தாகும் கோதைதமிழ்
நாதம்நற் "றிருப்பாவை
நாய்ச்சியார் திருமொழியை"
ஓதநம்முன் "கண்ணபிரான்"
உவந்துவந்தே அருள்சொரிவான்!

திருவுடையான் "நந்தனெனும்"
சீர்உடையான் தன்குலத்தில்
விருப்புடனே தாமிணைந்து
வினைதீர்க்கும் கண்ணபிரான்
பெருமரத்தைக் கொடியாகிப்
பிணைந்திட்ட கோதையென்பார்
இருஇனிய பிரபந்தம்
இசைத்தளித்தார் உலகுய்ய!

நண்ணியே திருப்பாவை
நாய்ச்சியார் திருமொழியைப்
பண்ணிசைத்து மிகஉருகிப்
பாடியேதம் மனம்விழைந்த
கண்ணனையே நாயகனுய்க்
கரம்பிடிக்கச் செய்தாரைத்
திண்மையுள்ள ஆண்டாளைத்
தெய்வத்தைப் போற்றுவோம்
சேர்ந்து!

---

கவிஞர் வி. மு உலகநாதன்—சென்னை.

---



(8-ம் பக்கத் தொடர்ச்சி)

அருளிச் செய்யப்பட்டது என்றும் கூறுவதுண்டு. தவிர நம்மாழ்வார் நாயக, நாயகி பாவத்தில் பாசுரங்கள் அருளிச் செய்திருப்பது போலவே, திருமங்கையாழ்வாரும் பரகாலன், பரகாலநாயகி என்ற பாவத்தில் பாசுரங்களை அருளிச் செய்துள்ளார்.

திருமங்கையாழ்வார் எம்பெருமான் பக்கலிலே, ஸர்வார்த்த க்ரஹணம் செய்தபடியாலும், தவிர எம்பெருமானே ஆழ்வாருக்குத் தானே நேரில் திருமந்திரத்தை உபதேசம் செய்தபடியால், மற்ற எந்த ஆழ்வாருக்கும், ப்ரபந்தகளுக்கும் இல்லாத ஏற்றம் இவருக்கு ஏற்பட்டது. திருமங்கையாழ்வாரும் தாம் அருளிய முதல் பிரபந்தமாகிய பெரிய திருமொழி முதல் பத்து, முதல் திருமொழியில் திருமந்திரத்தின் பெருமையை பரக்க அருளிச் செய்து 9ம் பாசுரத்தில் 'குலம் தரும் செல்வம் தந்திடும்' என்ற பாசுரத்தில் பலஸ்ருதியையும் தெரிவித்துள்ளதால் இவ்ர் பாசுரம் ஏற்றமுடையதாகிறது. தவிர பெரிய திருமொழி 8ம் பத்து, 10ம் திருமொழி 3ம் பாசுரத்தில் திருக்கண்ணபுரத்து எம்பெருமான் விஷயமாக பின் வருமாறு அருளியுள்ளார்.

" மற்றும் ஓர் தெய்வம் உளதென்று
இருப்பாரோடு
உற்றிலேன், உற்றதும் உன்னடி
யார்க் கடிமை,
மற்றெல்லா பேசிலும் நின் திருவெட்
டெழுத்தும்,
கற்று, நான் கண்ணபுரத்துறை
யம்மானே."

இப்பாசுரத்தில் திருமங்கையாழ்வார் கூறுவது என்னவென்றால், 'திருவெட்டெழுத்தைக் கற்று அறிந்து கொண்டது என்னவெனில் 'வேறு தெய்வம் இருக்கிறது என்று நினைப்பவர்களுடன்கூட, நான் ஒருவித ஸம்பந்தமும் வைத்துக் கொள்ள மாட்டேன். என்னுடைய சம்பந்தமெல்லாம், எம்பெருமானுடைய தாஸார்களுக்கு பாகவத கைங்கர்யம் செய்வதே ஒழிய வேறில்லை' என்று பகவானிடம் விண்ணப்பிக்கிறார்.

இவ்விதமாக திவ்ய தேசங்களை மங்களா ஸாஸனம் செய்து கொண்டு திருவரங்கத்திற்கு வந்து நம்பெருமாள் முன்னே, திருநெடுந்தாண்டகத்தை தேவகானத்தாற்பாடவே, பெருமாளும் அகமகிழ்ந்து, என்ன வேணும் ஆழ்வாரே என்று கேட்க, ஆழ்வாரும் மார்கழி மாதத்தில் நடக்கும் திருஅத்யயநோத்ஸவத்தின் போது, நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியையும், வடமொழி வேதங்களோடு பாராயணம் செய்ய அனுக்ரஹிக்க வேணும் என்று விண்ணப்பம் செய்தார். நம் பெருமாளும் அவ்வண்ணமே நடக்க அருள் செய்தார். அதன்படி திருமங்கையாழ்வார், அர்ச்சாவிக்ரமான நம்மாழ்வாரை ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கத்திற்கு எழுந்தருளச் செய்து உபய வேதபாராயணத்தையும் செவ்வனே நடக்கச் செய்தார்' இவ்வாறு திருமங்கையாழ்வார் ஆரம்பித்து வைத்தது இன்று வரையிலும் ஸ்ரீரங்கத்தில் திருவத்யயநோத்ஸவத்தில் நடந்து வருவதைக் காணலாம்.

தவிர ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகனுக்கும், திருமங்கையாழ்வார் அருளிச் செயல்களில் மிகவும் ஈடுபாடு என்பது அவருடைய வாழித் திருநாமத்தில் நடுநாயகமாய் விளங்கும் நான்காவது அடியான, 'கலியனுரை குடி கொண்ட கருத்துடையோன் வாழியே' என்று ஸ்வாமி தேசிகனின் திருக்குமாரரான நயினாராச்சான் அருளிச் செய்த வாழித் திருநாமத்தால் தெரிகிறது. பொதுவாக பிரபந்தங்களின் நடுமத்தியில் அதன் ஸாரமான அம்சத்தைக் கூறுவது மரபு. 30 பாசுரங்களைக் கொண்ட திருப்பாவையில் 15ம் பாசுரமான 'எல்லே இளங்கிளியே' என்பதில் பாகவதர்களின் ப்ரபாவமும், 32 அதிகாரங்களைக் கொண்ட ரகஸ்யத்ரய ஸாரத்தில் 16ம் அதிகாரத்தில் புருஷார்த்த க[illegible]டையும் கூறப்பட்டுள்ளன. அவ்விதமே நம்மாழ்வாரும் திருவாய்மொழியின் நடு மத்தியான சரணாகதியின் ப்ரபாவத்தை,

" நாகணை மிசைநம்பிரான் சரணே
சரண் நமக்கென்று—நாள்தோறும்
ஏக சிந்தையனாய்...... ..."

என்று வெளியிட்டிருப்பது போலவே, ஸ்வாமி தேசிகனின் வாழித் திருநாமத்தின் நடுநாயகமாய் விளங்கும் நான்காவது அடியான, 'கலியனுரை குடி கொண்ட கருத்துடையோன் வாழியே' என்பதில், திருமங்கையாழ்வாரிடத்திலும், அவருடைய அருளிச் செயல்களிலும் ஸ்வாமி தேசிகன் கொண்டிருந்த அளவற்ற ஈடுபாடும் கருத்தும் நன்கு புலனாகிறது என்பர் நம்முன்னோர்.

முடிவுரையும் அவதார முடிவும் :

வழிப்பறித்தலாகிய அக்ருத்யத்தை செய்தாலும், அச்செல்வம் முழுவதுமாக, பகவத் பாகவத கைங்கரியத்திற்கே உபயோகித்ததினாலும், புகழ் புண்ணியங்களையேயன்றி, பழி பாவங்களைச் சிறிதும் பெறாது பெருமாளுக்கு மிக்க 'முகோல்லாசத்தைச் செய்து சீருற்ற இத்திருமங்கை ஆழ்வாரும், தாம் அருளிச் செய்த திவ்ய ப்ரபந்தங்களால் உலகத்தை நன்னெறியில் இட்டுச் சென்று கலியின் தோஷத்தையும் கடிந்ததினால் இவருக்கு கலிகன்றி என்ற திருநாமமும் ஏற்பட்டது.

இவ்விதமாக இந்த திருமங்கையாழ்வார் பல திவ்ய தேசங்களை மங்களாஸாஸனம் செய்து பாண்டியநாட்டில் திருக்குறுங்குடி என்னும் க்ஷேத்திரத்திற்கு வந்து, அங்கு பெருமாளை சேவித்த ஆழ்வாருக்குமேல் வீட்டையடைய அவா ஏற்பட்டு அவ்வண்ணமே திருக்குறுங்குடி நம்பி சந்நிதியில் விண்ணப்பம் செய்ய, நம்பியும் அப்போதே மேல் வீட்டையடைய அனுக்ரஹமும் செய்ய, ஆழ்வாரின் அவதாரமும் முற்றுப்பெற்றது.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. [illegible] REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517502.

